சிவமயம்

சிதம்பரம்

# இராமலிங்க சுவாமிகள் சரிதம்

பண்டிதை-அசலாம்பிகை அம்மாள்

இயற்றியது

உ

S.S. Ramasamy

சிவமயம்

சிதம்பரம்

# இராமலிங்க சுவாமிகள் சரிதம்







பண்டிதை - அசலாம்பிகை அம்மாள்

இயற்றியது.

# நான்முகம்

**சுத்த சன்மார்க்கத் தூநெறி நேயர்காள் !**

திருவருட்பிரகாச வள்ளலாரென்று வழங்கும் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் அவர்களின் ஜீவிய சரிதம் இன்றளவும் வசன ரூபமாக இருந்து வருவதால் இதனைச் செய்யுள் வடிவில் யாத்தளிக்க வேண்டுமென சுவாமிகளின் மெய்யன்பர் சிலர் எளியேனை மூன்றாண்டுகளுக்கு முன்பு அறிவுறுத்தியும் வற்புறுத்தியும் வந்தனர். எனினும், செயற்கரிய தொன்றில்லாச் சித்தர் பெருமானும் ஞானயோகியும் கருணை வள்ளலுமாகிய அப்பெரியாரின் சரிதத்தினையாக்கும் பணியில் எத்தகுதியுமற்ற பேதை ஈடுபடத் துணிவது பெருந்தவறாகுமென்றஞ்சி நீண்டநாள் முயலாதிருந்தேன். இந்நிலையில் மீண்டும் அம்முயற்சியினை மேற்கொள்ளும் தூண்டுதல்களாக நிகழ்ந்த இரண்டொரு சான்றுகளால் துணிந்து இதனை எனதாற்றலுக்கேற்றபடி இயற்ற நேர்ந்தனன்.

அஞ்ஞான்று சுவாமிகளின் அணுக்கத் தொண்டராகவிருந்த உபய கலாநிதிப்புலவர் முதலியோரால் ஒருவாறு தொகுத்துத் திரட்டிப் பதிப்பிக்கப்பட்டுள்ள பழைய பிரதிகளை அநுசரித்தும், பிற்றைஞான்று நிலவிய ருத்திரோற்காரி வருடத்தில் வள்ளலாரை உபாஸனா மூர்த்தியாகக் கொண்டொழுகிய காரணப்பட்டு ச. மு. கந்தசாமிப்பிள்ளையவர்களால் ஒப்புநோக்கப்பட்டு வெளிவந்த பதிப்பிற்கண்ட சரித நிகழ்ச்சிக் குறிப்புகளின்படியும், இதில் கூட்டல் குறைத்தல் இன்றி எவர்கட்கும் எளியநடையில் அமைத்திருத்தலை வாசகர்கள் எளிதில் உணரலாம். உரை நடையில் வெளிவரும் சில புதிய பதிப்புக்களில் அதனதன் ஆசிரியர்களின் விருப்பப்படி கூட்டவும், குறைக்கவும், திரிக்கவும், மாற்றவும் இடந்தருவதென்பது கண்கூடு. அருட்பாவைப் போன்ற செந்தமிழ் இன்பஸார ஸாகரமாகிய அருங்கொடையைத் தமிழ் மக்களுக்கு வாரிவழங்கிய வள்ளற்பெருமானின் ஜீவிய சரிதமும்,

உத்தரஞான சிதம்பர மான்மியமும் எளிதில் மாற்ற முடியாதபடி செய்யுள் வடிவிற்றிகழ்தல் இன்றியமையாததென்பது எனது தாழ்மையான கருத்து. தற்காலம் சிற்சில சரித சம்பந்தமான குறிப்புகள் வெளிவந்தனவாயினும் போதிய ஆதாரமாகக் கொள்ள இயலாதவைகளை இதிற் புகுத்தத் துணிகிலேன்.

அன்றியும் வள்ளற் பெருமானின் திருவுருவம் இதுகாறும் வெளிவந்துள்ள எல்லாவிதமான பதிப்புக்களிலும் காணப்படுவ துண்மை; தனது உருவத்தின் நிழலைப் பொலிவிக்கும் விருப்பம் வள்ளலாருக்கு இலையென்பது சுவாமிகளின் சரித முணர்ந்தோர்களுக்கு எடுத்துரைக்க வேண்டுவதில்லை. அன்றியும் புத்தகங்களைப் போற்றிப் பேணுவோர் சிலரும், அசட்டையாகப் பயன்படுத்துவோர் பலருமென்பது தற்காலநிலை. உபாசிக்கவேண்டிய குருநாதராகிய நமது சுவாமிகளின் திருவுருவம் புத்தக பயிண்டில் பிணைக்கப்பட்டு, மேலே சுட்டிய பிற்பட்ட மூறையிலும் பயன்படுமாறு செய்ய எளியேனுள்ளம் ஒருப்படாமையினால் அஃது கைவிடப்பட்டது. இது பலருக்குக் குறைவாகப்படலாமாயினும் எனது நோக்கம் பிழைபாடுடையதன்றென்பது கொண்டு பொறைபாராட்ட வேண்டுகின்றேன்.

இனி, இது இனிது முடியத் தோன்றாத் துணையாக உடனிருந்துதவிய வள்ளலாரின் பெருங்கருணையை எஞ்ஞான்றும் நெஞ்சம் நெகிழ்ந்து நினைகின்றேன். தவிர இதனை விரைவில அச்சிடுவிக்கப் போதிய சாதனம் கைகூடாதநிலையில், நட்புரிமை குன்றாது அச்சியற்றி யளிக்க முன்வந்த சாது அச்சுக்கூடத் தலைவருக்கும் எனது மாசற்ற நன்றி யுரித்தாகுக.

ஓம் சுபம்

அசலாம்பிகை

சிவமயம்

சிதம்பரம்

# இராமலிங்க சுவாமிகள் சரிதம்

## மறு பதிப்பின் பதிப்புரை

திருச்சிற்றம்பலம்

"அனுச யப்பட் டதுஇது என்னுதே
கனிம னத்தோடு கண்களும் நீர்மல்கிப்
புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார்
மனித ரில்தலை யான மனிதரே"

—நாவரசர். திருமுறை 5.

திருச்சிற்றம்பலம்

எல்லாம் வல்ல இறைவன் எம்பெருமான் திருவருளால் இவ்வுலகம் இயங்குகின்றது என்பதை அறியாதார் இரார்.

இப்பரந்த உலகத்தில் ஆறறிவுடன் கூடிவாழும் மக்கள் தம்மானுடப் பிறவியைப் பெற்றதும் இதன் அருமையை உணர்ந்து இவ்வுடம் பினுள்ளிருக்கும் உயிர்க்குயிராய்த் திகழும் உத்தமனாகிய ஆண்டவனைக் காண முயலவேண்டும். கண்டு அவனருளைப் பெறவேண்டும். பெற்றுப் பேரின்பத்தைத் துய்க்கவேண்டும் என்பது முதலானவைகளே தலையாய மனிதனின் குறிக்கோளாக விருத்தல் வேண்டு மென்பது அறிஞர் கூறும அறிவுரை.

உடம்பினுள்ளிருக்கும் உத்தமனை நாம் காணவேண்டுமானால் நமக்கு ஒரு நல்ல ஆசிரியர் துணை அவசியம். இது இல்லாமல் அவனைக்காண இயலாது. சைவர்களாகிய நமக்கு, நாம் செய்த புண்ய விசேடத்தால் நான்கு சமயாச்சாரியார்கள் தோன்றி நல்வழியைக் காட்டியுள்ளார்கள். இவர்கள்தாம் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசக சுவாமிகள் ஆவார்கள்.

இவ்வாச்சாரிய சுவாமிகளுக்குப் பின்னர் தோன்றிய மகான்களுள் சென்ற நூற்றாண்டில் தோன்றியவர் வடலூர் வள்ளல் பெருமானார் அவர்கள். இவர்கள் அந்நால்வர் பெருமக்களையே தமக்கு உற்ற துணையாகக்கொண்டு அவர்களைப் போற்றி வணங்கி, வழிபட்டு, அவர்கள் திருவருட் துணைகொண்டு, பல்லாயிரக் கணக்கான இனிய, அரிய, அருட்பாடல்களைப் பாடியுள்ளார்கள். பல நல்லறிவுரைகளை நமக்குப் போதித்துள்ளார்கள். இப்பாடல்களைத் தற்காலத்

தில் பெரும்பாலான மக்கள்பக்தி சிரத்தையுடன் ஓதிஉய்ந்து வருவது கண்கூடு.

இனி வள்ளல் பெருமானார் வரலாற்றினை வசன நடையில் பலர் எழுதியுள்ளார்கள். இவர் தம் அரிய வரலாற்றை இனிமையான செந்தமிழ்ப் பாடல்களால் செய்யுள் நடையில் திருமதி அசலாம்பிகை அம்மையார் அவர்கள் எழுதியுள்ளார்கள். இவர் பெருமையை நாம் அளவிட்டுக் கூற முடியாது. எனினும் 'தமிழ்த்தென்றல்' என வழங்கப் பெறும் "திரு. வி. க." அவர்களே இவ்வம்மையாரைப் பெரிதும் பாராட்டியுள்ளார்கள் என்றால். நாம் கூறுவது மிகை, இவர் இயற்றிய செய்யுள் வடிவான வரலாற்று நூல் பிரதிகள் யாவும் செலவாகிவிட்டன. பலர் படித்து பயனடைந்தார்கள்.

இவ்வரலாற்றை மீண்டும் அச்சிட்டு மக்களுக்கு வழங்கி அவர்கள் உய்யுமாறு செய்யவேண்டியது தலையாய மனிதரின் கடமை என்று வள்ளல் பெருமானாரின் அணுக்கத் தொண்டரான உபயகலாநிதிப் புலவர் "தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்களின் புதல்வரும், எங்கள் உழுவலன்பரும் வள்ளல் பெருமானாரிடம் பெரிதும் ஈடுபாடுடையவரும் நல்லொழுக்கமுடையவரும், ஓய்வுபெற்ற பேராசிரியருமான திருவாளர் T. V. செங்கல்வராய முதலியார் M. A. அவர்கள் தெரிவித்திருந்தார்கள், அன்னார் எங்கள் குடிலுக்கு விருந்தாக வந்திருந்தபொழுது வள்ளல் பெருமான் திருக்காப்பு இட்டுக்கொண்டதும் பின் கதவு திறக்கப்பட்ட விஷயமாகவும் விபரம் கேட்டோம். அவர்களுக்கு அவர்களுடைய தந்தையாரும், தமையனாரும் நேரில் தெரிவித்த விபரத்தை சொன்னார்கள்; அதாவது:—

" வள்ளல் பெருமானார் அறைக்குள் சென்று திருக்காப்பிடும்பொழுது, தாம் கதவின் உட்புறம் தாளிட்டுக்கொள்வதாகவும் உபயகலாநிதி முதலியார் கதவை வெளிப்புறம் பூட்டிக்கொள்ளவேண்டும் என்றும், கதவை எக்காரணம் கொண்டும் திறக்கவேண்டாம் என்றும் அப்படித் திறந்தால் தன்னை ஷ்ை அறையில் காணமுடியாது என்றும், ஆனால் இரண்டரைக் கடிகையில் திரும்ப வருவதாகவும் சொல்லி, தாளிட்டு கொண்டார்கள்.

குருவின் ஆணைப்படி திருவாளர் வேலாயுத முதலியார் அவர்களும். மற்றும் உள்ளோரும் நடந்துகொண்டார்கள். பின் கடலூர் மாவட்டத்திலுள்ள அரசாங்க அதிகாரம் பெற்ற உத்தியோகஸ்தர்கள் வந்து ஷ்ை கதவைத் திறந்து பார்க்கும்பொழுது தெய்வ மணம்மட்டும் கமழ்ந்தது. திருவுருவம் காணப்படவில்லை." என்பதுதான் திரு. செங்

கல்வராய முதலியார் அவர்கள் எங்களிடம் தெரிவித்த விபரம், இது விஷயமாக வள்ளல் பெருமானார் சமகாலத்தவரும். அன்னாரோடு நேர் தொடர்பும் உள்ள திருக்கோயிலூர் 'தபோவனம் ஸ்ரீமத் ஸ்ரீஞானானந்தகிரி சுவாமிகள் அவர்களை நாங்கள் சுமார் 4 வருடங்களுக்கு முன்நேரில் கேட்டபொழுது, வள்ளல் பெருமானார்ஆண்டவனுடைய அநுமதியின் பேரில் அவனைப்பற்றியே புகழ்ந்து பாடிக் கொண்டு பல உலகிலும் உலாவிக் கொண்டிருப்பதாகவும் தெரிவித்தார்கள்.

முதலியார் அவர்களின் வேண்டுகோளின்படி, இந் நூலின் இரண்டாவது பதிப்பை அச்சிட்டு அன்பர்களுக்கு வழங்குகிறோம். உரிய காலத்தில் நல்லமுறையில் அச்சிட்டுத் தந்த 'பாரி அச்சகத்தாருக்கு' எங்கள் நன்றி.

கோடம்பாக்கம்
சென்னை-24.
6-2-74

மு. கந்தையாபிள்ளை
மு. அப்பர்சுவாமிபிள்ளை
மு. சங்கரன்பிள்ளை

---

அழிவில்லாத அருள்மொழிகளையும் அருட்பாக்களையும்
வாரிவழங்கிய

## வள்ளலார் ஜாதகம்

கலியுகம் 4925-ல் நிகழ்ந்த சுபாநு ஆண்டு புரட்டாசிமீ 21உ ஆதிவாரம் பூர்வபக்ஷம் துவிதியை-சித்திரை-நான்காம் பாதம், உதயாதி நாழிகை $26\frac{3}{4}$ மீனலக்கினத்தில் ஜனனம்.

| | | | |
|---|---|---|---|
| ல | | சனி | குரு |
| | இராசி | | செவ் கேது |
| ராகு | | | |
| | | புதசு சந் | சுக் சூரி |

# பொருளடக்கம்

உ

சிவமயம்

# சிதம்பர - இராமலிங்க சுவாமிகள்

# சரிதம்

## பாயிரம்

### காப்பு

வள்ளல் இராமலிங்க வானவளுர் சீரடிகள்
உள்ளங் குளிர வுவந்தேத்தி—விள்ளும்
திருக்காதை யானைமுகத் தேவின் கருணைப்
பெருக்கா லொளிரும் பிறங்கி. 1

### இதுவுமது

துள்ளும் அன்பினர் துனிபடு பிறவியின் துயரம்
தள்ள வேயிளங் காலது தவழ்குழைச் செவிதாழ்
பிள்ளை யார்கழற் றுணைகொடு பெரியரிற் பெரிய
வள்ள லார்திருக் காதையை வழுத்தவும் துணிந்தேன். 2

பெருங்க டாவினில் இவர்பவன் பிணித்திடும் பாசம்
நெருங்கி டாவகை அடியனேன் நிறைபவம் கழுவக்
கருங்க டாம்உமிழ் கரிமுகக் கடவுள்மா கருணை
தருங்க டாவிடை தவிர்ந்தவர் தனிப்புகழ் தழைக்க. 3

## சிவசுப்பிரமணியக் கடவுள்

இருக்கைபோய் இடம்போய் இயலும்போய்
அமரர் இனைந்திடத் திருவுளம் இரங்கித்
திருக்கை வேல்எடுத்த சேவகன் மலர்த்தாட்
செல்வமே செழுந்துணை யாக
வருக்கை மாவிலகும் வளங்கெழு வடலூர்
வள்ளலார் உதயமாம் அமுதப்
பெருக்கை யான்பருகத் துணிந்தனன் எய்தும்
பிழைதவிர்ந் தின்பமே பிறங்க. 4

## சபா நாயகர்

உத்தர ஞான சிதம்பரம் எனவே
உரைக்கும்இவ் வரைப்பினி லோங்கும்
சத்திய ஞான சபையினில் நடனம்
சார்ந்திடும் தனிப்பெருங் கருணை
நித்திய ஒளியே இராமலிங் கப்பேர்
நிருமல விகரிலாச் சரிதம்
பத்தியால் உரைக்க எழுந்தபே ராவற்
பயிரினை வளர்க்குமா லினிதே. 5

## ஞானனந்த வல்லி

தானந்த மில்லா யோகி தவமலை இராம லிங்கக்
கோனந்தம் குரவன் காதை குறைவற மொழியு மாற்றல்
வானந்தண் ணளியால் மாரி வழங்குதல் போல ஞான
ஆனந்த வல்லி யம்மை யளித்திடும் கருணை யாலே. 6

## ஸத்தியஞான ஜோதி

மாட்சியார் வடலூர் மன்னிய சபையில்
வயங்குமேழ் திரைகடந் தொளிரும்
காட்சியாம் ஜோதி தரும்பிர காசம்
கடலினும் பெரியதா மோகப்

பூட்சியார் எளிய மதியினேன் ஞானப்
புனிதனுர் சரிதமே யோதச்
சாட்சியா யிலகி இருளற விளக்கும்
தகவுறத் தனதியல் பதனுல். 7

## திருஞானசம்பந்த சுவாமிகள்

கருமணங் கமழா தின்பக் கதியினை எவ்ரும் வாய்ப்பத்
திருமண விருந்தா யீந்த தேசிகன் திருத்தாள் போற்றி
வருமண மலர்க்கா சூழும் வடல்நக ராளி தெய்வப்
பெருமணங் கமழ்சீர்க் காதை பேசவும் விழைவுற் றேனே. 8

## இதுவுமது

பெண்ணினை எலும்பாச் செய்த
பிஞ்ஞகன் வியப்ப அன்னுன்
தண்ணருள் வலமே தாங்கி சால்புறு
மயிலைப் பெண்ணின்
வெண்ணிற வெலும்பைப் பெண்ணுய்
விரைந்தெழச் செய்த செல்வன்
வண்ணவான் கமலப் பொற்றுள்
வணங்கியீ தறைகு வேனே. 9

## திருநாவுக்கரசு சுவாமிகள்

காவுக் கரசும் ஒருபொருளாய்க்
கருதா வுறுதி வாய்ந்ததிரு
நாவுக் கரசின் அருள்உளதேல்
நசியா வுடல்கொண் டுலவுமருட்
பாவுக் கரசின் அவதாரப்
பான்மை அறிந்தோர் வகுத்தபடி
பூவிற் குரைசெய் திடும்பணியும்
பொருந்தும் எனவே நினைந்தனனே. 10

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

விட்டவர் தமக்கே வீடென் றருளிய விமல ஞரை
இட்டமார் பரவை வாய்தல் ஏகுமா றேவல் கொண்டோனி
மட்டுலா மலர்மென் பாதம் வழுத்திமா வடலூர் கண்ட
சிட்டஞர் காதை தானும் தெரிந்திட நயந்திட் டேனே. 11

## மாணிக்கவாசக சுவாமிகள்

பெருவாத முறைகளிஞற் பேசரிய பெருமானே
குருவாகித் தனையுணர்த்தக் கொண்டபெருந் தவராகும்
திருவாத வூரடிகள் சேவடிகள் முடிசூடிக்
கருவாதந் தவிர்வடலூர்க் காவலர்தம் புகழ்உரைப்பாம்; 12

## தண்டீச நாயஞரும் நாயன்மார்களும்

தந்தையார் தாள்களொடும் தன்பிறவித் தாள்அரிந்த
மைந்தஞர் கழல்போற்றி மற்றுமுள மெய்யடியார்
பந்தமிலாப் பணிபோற்றிப் பண்புடைய வடலூர்வாழ்
நந்தலிலாத் தவமுனிவன் திருக்காதை நவின்றிடுவாம். 13

## அணுக்கத் தொண்டர்கள்

* மன்திரு வடிவம் தெரிசித்தோர் அருகே
மருவிடும் பேற்றிஞேர் நிகரின்
ருென்றிய வருளின் சித்தெலா முணரப்
பெற்றவர் ஒழிவிலாக் கருணை
நன்றுள மறிந்தோர் ஆகிய எண்ணில்
நலத்திஞேர் தமையெலாம் வணங்கிச்
சென்று தீர்வரிய பத்தியா லிதனைச்
செப்புவன் திருவருட் படியே; 14

---

* ஈண்டுமன் என்றது சுவாமிகளைக் குறிப்பது

## சிதம்பரம் - இராமலிங்க சுவாமிகள்

அளவையிற் பருக வேண்டிய தேனும்
அமுதமும் புறங்கொ டுத்திரிய
அளவையில் உவமை கடந்தநின் தெய்வ
அருட்பெரும் பாக்களைத் தினமும்
வளமுறப் படித்தும் நானுரு துன்சீர்
வரைந்திட எழுந்தஎன் மடமைக்
குளமுற முனியா திரங்கி யின்கருணை
வழங்குவா யுடனிருந் தரசே. 15

கொங்குதேர் வாழ்க்கைப் பாசுர மதனைக்
கூடல்நா யகர்முனம் தருமி
தங்கவி யெனவே சாற்றுமா றளித்த
சதிர்எனத் தமிழ்இயல் பறியா
இங்கென தறிவிற் கலந்துநீ பாட
இயக்குவித் திடினலால் எளியேன்
பங்கினிற் புகழ்வந் தெய்துமோ வடலூர்ப்
பண்ணவா அண்ணலே பரனே. 16

## தமிழ்த் தெய்வம்

இமிழ்திரை யுலகினில் இணையிலா நயம்
கமழ்சிவ மணத்தொடும் கலந்து தேனுவின்
அமிழ்தென வள்ளலார் அருள முற்படும்
தமிழ்மொழி யணங்கினைச் சார்ந்து வாழ்குவாம். 17

## பாரத மாதா

தோன்றிய வுடலம் வீழ்ந்திடா தென்றும்
துலங்கியே பொலிவுற வல்ல
வான்தவ முடைய அருட்பெருஞ் சோதி
வள்ளலார் எனவுல கிறைஞ்சும்

சான்றமா தவனைச் சித்தர் நாயகனைச்
சால்புறும் யோகியர்க் கிறையை
ஈன்றபா ரதத்தாய் இருசரண் முடிமேல்
ஏற்பது கடமையா மெனக்கே. 18

## நூல்செய்த காரணம்

மாற்றிலாப் பாவப் பயிரினை வளர்த்தே
மற்றதன் பயனுகர்ந் திடுவான்
தோற்றியிப் புவியில் உயங்கும்என் துயரம்
தொலைத்துல வாதபே ரின்பப்
பேற்றினை யளிக்க வல்லது வடலூர்ப்
பெரியவர் கழல்களே யென்னச்
சாற்றிய தெய்வத் திருமொழி சிரத்திற்
றாங்கியீ தறைந்திட விழைந்தேன். 19

நினைத்திடற் கரிய அனைத்தையும் புரியும்
நிகரிலாச் சித்தர் நாயகனை
மனத்திரு நிதியாய் அமைத்திடில் ஊழின்
வயத்ததாம் இருவகைப் பிணியும்
பனித்திடல் உறுதி எனமுதுக் குறைந்தோர்
பரிவினுல் எனக்கெடுத் துரைத்த
இனித்தகட் டளையை ஆசியா யேற்றும்
ஏற்றனன் இப்பணி தனையே. 20

## நூற்பயன்

இம்மையி லெய்த வேண்டிய பயன்கள்
அனைத்தையும் இனிதுவேண் டிடினும்
அம்மையிற் பயனை அடையவேண் டிடினும்
அருட்பெருஞ் சோதியா ரெனவே

செம்மைசேர் உலகம் சிறப்புறப் போற்றும்
சித்தர்கள் சிரமணி யாய
எம்மையன் சரிதம் அளித்திடும் இதற்கோர்
எட்டுணை ஐயமு மிலையே. 21

நித்திய யோகி யாகிய நிமலன்
நிகரிலாக் காதையை நினைவோர்
பத்தியாற் படிப்போர் படித்திடக் கேட்போர்
பரவச வுணர்ச்சியிற் படிவோர்
சத்தியஞான அருட்பெருஞ் சோதித்
தண்ணருள் மிகமிக வாய்ந்து
பொத்திய மாயைத் திரையகன் றிறவாப்
பூரண இன்பமே வுவரே. 22

## அவையடக்கம்

ஏத்தொ ணாத இராமலிங் கப்பெயர்த்
தீர்த்த ஞர்தம் திருவவ தாரமாம்
சீர்த்த காதையைச் செப்பச் சிறியனேன்
வார்த்தை காணல் மதியள வாகுமோ. 23
மொழிகு வேன்எனக் கொண்ட முனைப்பினுல்
எழுவ தன்றிஃ தென்பதை யெண்ணியே
முழுது ணர்ந்த முதுக்குறை வாளர்உட்
பொழியு மன்பிற் பொறுத்தருள் செய்வரே. 24

## வேறு

எடுக்கும் எடுப்பும் மொழிவழக்கும்
இனிமை யொழுக்கும் உடல்சிலிர்ப்பத்
தொடுக்கும் கவிதைக் குருபரனும்
தூயோன் சரிதம் துணிந்தியம்பல்

அடுக்கும் அடுக்கா தெனவுணரா
தமைந்த மடமைக் குளமிரங்கி
மடுக்கும் சுவைத்தண் டமிழ்வாணர்
மகிழ்வா யன்பு வழங்குவரே. 25

பாயிர முற்றிற்று

— —

## ஆற்றுப்படலம்

சந்தனம் அகில்முகிற் றருக்கொள் கானிடைத்
தந்திகள் பிடியெனத் தழுவக் கார்முகில்
பந்தியிற் படர்வுறும் பனிமென் தாழ்வரை
நந்திமால் வரையென நவில்வர் நாமமே. 1

தன்வர சாட்சியிற் சார்ந்த கன்னட
மன்வர் மைசூரென வழங்கு நாட்டினில்
துன்னிய நந்திமால் வரையிற் றோன்றியே
தன்னியல் கதியினிற் சாரும் இந்நதி. 2

அன்னமால் வரைஇழி யருவி யாறுகள்
பன்னிய பெயர்பல பரித்துப் பார்மகள்
முன்னிய வளம்பட முடுகும் பெண்ணையும்
தென்திசை வழிக்கொடு சேர லுற்றதே. 3

வெண்ணெய்நின் றுருகுதல்போலும் வேகமாய்
எண்ணுமுன் சுரந்தெழு மினிய வார்புனல்
உண்ணெகிழ் கருணையி னெழுகி ஓம்பிடும்
புண்ணிய நதிப்புகழ் புகலு வாமரோ. 4

பருப்பதம் வணக்கிய பரமன் பற்றிய
செருப்பயில் பிஞகியாம் சிலையிற் றோன்றலால்

திருப்பெயர் பினாகினி எனவும் செப்புவார்
தரைப்பெரு வளம்பெறத் தவழும் யாற்றினை. 5

பனிவரை யினில்வரும் பரமன் சென்னிவாழ்
புனிதமா நதியெனப் புகலும் கங்கையும்
தனில்மநுக் குலமெலாம் தவிர்க்கும் வெவ்விய
வினைகளைப் பெண்ணையில் வீழ்த்து மென்பரால். 6

வெவ்வினை தவிர்த்திட விரும்பிக் கங்கைதான்
ஒவ்வொரு வருடமும் உத்த ராயணச்
செவ்விய மதிமுத லைந்து தேதிகள்
இவ்வுழி எய்துமென் றியம்பு வார்களே. 7

என்றிரு நதிப்புகழ் இயம்பு மான்மியம்
ஒன்றிய வாய்மைபோல் ஒழிவி லாமலே
இன்றும்அப் பெண்ணையா றேகும் ஊரெலாம்
நின்றிடும் திருவிழா நிகழ்தல் சான்றரோ. 8

கங்கைதான் பெண்ணையிற் கலக்கும் என்பதால்
இங்குல கோரெலாம் எய்தி யாடுதல்
புங்கமாய்க் கருதினர் பொருந்து மன்பினால்
மங்கலப் புகழ்பிற மருவ வேண்டுமோ. 9

ஔவையார் தெய்விக வரசன் மாட்டெழும்
எவ்வமில் அன்பினால் இசைந்த செந்தமிழ்ச்
செவ்விய பாவினுட் பொருளைத் தேர்திறம்
வவ்விய தெனும்புகழ் வழுத்த லாவதோ. 10

தண்புனல் மாற்றியே தயிர்நெய் பாலிவை
கண்பட இமைப்பினிற் பெருக்கிக் காவலன்
எண்படு வியப்பினி லேற்க நல்கிய
ஒண்புகழ் உரைப்பதற் குரைகள் சாலுமோ. 11

## வேறு

திருந்தும்இந் நிகழ்ச்சி தெய்விக நிருபன்
திருமணத் தியைந்ததா தலினல்
இருந்தவப் புலமை வில்லியார் முன்னம்
இசைத்தபா ரதப்பெரு நூலில்
அருந்தமி ழறிவிற் சிறந்தமா நதியென்
றறைந்தனர் வியப்பினு லிந்தப்
பெருந்தவ நதியாம் பெண்ணையை யெனில்யான்
பேசுதல் அழகிதோ பெரிதும். 12

ஆற்றினிற் சேதி நாட்டினை யடுத்த
திருமுனைப் பாடியென் றறவோர்
போற்றும்நா டதனைப் பொருந்துநாற் றிணையும்
புதுவளம் கொழித்திடப் புரந்தே
சாற்றரும் புனிதத் துறைபல தாங்கித்
தடுப்பருந் தகையின தாகி
ஈற்றினிற் புலிக்கால் இருந்தவன் பதியாம்
எழில்வட புலிசைசார்ந் ததுவே. 1

வீக்கிய கருங்கல் மூட்டறக் கடலில்
மிதந்திட ஐந்தெழுத் தோதி
வாக்கினுக் கரசர் இவர்தர விடுத்த
மாபெரும் புகழினை யுடைய
பூக்கிளர் திருப்பா திரிப்புலி யூரின்
புணரியை நாடியே கூடித்
தூக்கிய தமிழை யறிந்ததன் போதம்
துலங்கிடச் செய்ததால் மாதோ. 14

### ஆற்றுப்படலம் முற்றிற்று

---





## நாட்டுப் படலம்

சேதி நாடும் திருமுனைப் பாடியும்
நீதில் சேய்நதித் தென்புறம் எல்லையாய்
ஓதும் *வெண்ணதிக் குத்தரம் உள்ளிடம்
ஆதி யாக வழக்கில் அமர்ந்ததால்; 1

வேந்தர் மூவர்தம் எல்லைகள் வேலியாய்
நேர்ந்த தன்றியும் அந்த நிருபர்கள்
சார்ந்த ஆட்சியும் தாங்கிய காரணம்
கூர்ந்து பின்நடு நாடெனக் கூறினர். 2

ஒப்பில் பெண்ணை யொழுகி வுயர்வளம்
வைப்பில் ஈந்து வளர்க்கும்இந் நாடுதான்
எப்பெ ருந்திருவா லு மிலகுறும்
செப்புந் தன்பெயர் உண்மை சிறக்கவே; 3

### வேறு

ஐந்திணை வகுத்தனர் அறிஞர் ஆற்றினில்
முந்திய குறிஞ்சிவெம் பாலை முல்லையும்
விந்தைவாழ் மருதமும் வேலை நெய்தலும்
இந்தமா நிலத்தின தியல்புக் கேற்பவே; 4

ஒருதிணை வளத்தையே யுதவு மூர்பல
இருதிணை வளங்களு மீயும் பார்பல
தருதிணை நான்கினின் வளமுந் தந்திடும்
பெருமைய திந்நடு நாட்டின் பெற்றியே. 5

புயல்தவழ் வரைவளம் பொருவில் கான்வளம்
கயல்புரள் வயல்வளம் கானல் வேலைவாய்
இயல்வள நான்கையும் இனிதி னீவதால்
அயல்வளம் வேண்டுதற் கமைய மின்றியே. 6

---

* வெண்ணதி-வெள்ளாறு

தென்றிசை வரநதி யென்னச் சேக்கிழார்
நன்றிசை கெடிலமா நதியு மித்திரு
வொன்றிய நாட்டினை உயிரின் ஓம்பிட
நின்றிடு பெருமையும் நிலவி யார்ந்ததே. 7

எவ்வற நீதியும் உலகிற் கீந்தருள்
ஔவையாம் பெருமகள் அலகில் அற்புதம்
செவ்விதி னாற்றிடத் திகழும் கோவலும்
இவ்வொரு நாட்டினுள் இலகி நின்றதே. 8

அட்டவீ ரட்டமென் றறையு மாதலம்
எட்டினுள் அந்தகன் இறுதி யார்ந்திடப்
பட்டசீர்க் கோவலும் பரமன் புன்னகை
சுட்டிடும் அதிகையும் துலங்கு மாண்பதே.

பொழிதரு மன்பிற்பேய் பூதம் பொய்கையாய்க்
கெழுபெயர் அறிஞர்கள் கேடில் மாயனை
மொழிவிளக் கேற்றியே முன்னம் சேவைசெய்
அழிவில்நற் புகழும்இந் நாட்டிற் காயதே. 10

தம்பிரான் றோழராய்த் தரணி போற்றிடும்
நம்பியார் தனைத்தரும் நாவ லூரையும்
எம்பெரு நாவினுக் கரசை யீன்றிடும்
அம்பொன் ஆமூரையும் அகத்திற் பூத்ததே. 11

பெண்ணருந் திலகமாய்ப் பிறந்து மாசறு
தண்ணல்லவா கீசரை யருளுக் காக்கிய
புண்ணியத் திருவையும் பூத்திந் நாடுதான்
எண்ணுறும் நடுநிலை இலகச் செய்ததே. 12

தக்கஐம் பூதமாம் தலங்கள் தம்முளே
அக்கினி யிலிங்கமாய் அமரர் போற்றிட

முக்கணெம் மிறையமர் மூதன்மை வாய்ந்திடும்
திக்கெலாம் புகழ்பெறும் திருவண் ணுமலே. 13

ஏனமாய்க் கைதையாய் இருவ ராம்பெரு
வானவர் தேடிட வளர்ந்து சோதியாய்
மேனிமிர் அருணையாம் வெற்பும் இங்கிதிற்
ருனெனிற் பிறபெருந் தகுதி யாதரோ. 14

பொய்கண்ட மதியினர் புகலொ ணுதசீர்
கைகண்ட நெல்லியங் கனியிற் கண்ணுதல்
மெய்கண்ட மெய்கண்டார் விரும்பித் தோன்றிய
உய்கொண்ட வெண்ணெய்நல் லூரு முற்றதே; 15

அருந்தவ நாயகி யாகி அம்பிகை
வருந்திமா தவம்புரி மாண்பு வாய்த்திடும்
பெருந்திருப் பாதிரிப் புலிசைப் போது
தருந்தல மிதுவுமிந் நாட்டிற் சார்ந்ததே. 16

மூவரு மொருவரா மூர்த்தி யாகியே
தேவர்கள் நாதனுய்த் திகழும் பேரொடு
காவிநீள் விழியெழிற் கமலே நாயகன்
மேவிய திருவஹீந் திரமும் வேய்ந்ததே. 17

உத்தர காசியில் உயர்ந்த தாம்என
இத்தரை புகழ்ந்திட இலங்கு சீர்மணி
முத்தமா நதிகிளர் முதுகுன் ரும்பதி
இத்திரு நாட்டினில் இலகி யார்ந்ததே. 18

இவைமுதற் சிவதளி யிருப தோடிரண்
டவிர்தரு மிந்நடு நாட்டி லார்ந்திடும்
புவிமுழு திறைஞ்சுநம் புனித ஞானியாம்
தவகுரு வுதித்திடும் தானந் தானுமே; 19

## வேறு

பள்ளனும் பெரியான் றன்பால் பரமனார் கருணை பூத்து
ஒள்ளிய வயலில் அன்னான் உணவுகொண் டெய்தா முன்னம்
தெள்ளிய தினையின் தாள்கள் செழிப்பொடும் விளைந்துமுற்ற
விள்ளரும் புதுமை காட்டி வியன்கதி யளித்த வாற்றால். 20

திருத்தினை நகர மென்னத் திகழ்தரும் சிறப்பு வாய்ந்த
நிருத்தர்தம் பதியு மீண்டு நிகழ்த்திய தலங்கள் தம்முள்
பொருத்திய தாகு மந்தப் புனிதமா தலத்திற் கோரேழ்
கருத்துறு மயில்கள் தென்பாற் கலந்திடும் குடக்கி னூடே;

நின்றிடு மருதூ ரென்ன நிலவுல கேத்து மோரூர்
கன்றிடு புலியும் பாம்பும் களித்திடக் கனக நீடு
மன்றினில் மறைகள் காண மலர்ப்பதந் தூக்கி யெம்மான்
ஒன்றிய திருக்கூத் தாடும் உயர்பதி வடது பாலில். 22

காவதந் தனிலு மீண்டு கழறிய மருதூ ரென்னும்
தேவியல் கருவைத் தந்த திருவளர் பதிதா னிற்கும்
பூவிடைப் பொலிந்து நிற்கும் புரியெலாம் பொறாமை கூரப்
பாவியல் பெருமை பின்னாற் பயப்பதை யுணர்வார் யாரே;

## வேறு

மீன்சினை தன்னிலும் சிறிய வித்தினில்
வான்சினைக் கவடுகள் வழங்கும் ஆலென
ஆன்றசிற் றார்பல அறிவின் மேம்படு
சான்றவர் தமைத்தரல் சால்ப தாயதே. 24

படிபுகழ் விரிவுறும் பரம ஹம்ஸரும்
மடிவறும் ஞானியர் மரபும் மாதவ
முடியமர் முனிவரர் பலரும் முன்சிறு
குடிசையிற் பிறந்தனர் குறிக்குங் காலையே;

நாட்டுப்படலம் முற்றிற்று;

——

## திருவவதாரப்படலம்

ஒருதூரும் எய்தாதிவ் வுலக மெலாம் கதியெய்திக்
கருதூரக் காண்பல்எனும் கருணைமிகுங் குருபரனைத்
தருதூரத் தவமுடைத்தாய் தாரணியோர் புகழ்ந்தேத்து
மருதூரென் றுலகுரைக்க வயங்குமொரு பழம்பதியே; 1

நூல்விரியும் புகழ்விரிக்கு நோன்புடைய காவிரியின்
பால்விரியுங் கொள்ளிடப்பேர் பகர்நதியிற் படர்ந்துவரும்
கால்விரியும் வயல்வளமும் கவின்விரியும் மலர்ப்பொழிலும்
சால்புரிய நாற்குடியும் தழைத்திடும்அச் சீறூரே. 2

பொற்பொதுவார் வியன்பதியிற் புனைவிழவின் முழவொலி
நெற்பொதியி னயலுறங்கும் இளமேதி துயில்ஒருவும் [யால்
சொற்பொதியு மறையவர்கள் சூழ்ந்துறையும் புனிதமுறு
நற்பதிகள் இப்பதியைச் சார்ந்திலகு நலத்தினவே. 3

அத்தகைய சிற்றூரில் வள்ளுவனூர் அறைந்தபடி
எத்தொழிற்கு முயர்தொழிலாம் ஏருழவே கடைப்பிடித்த
உத்தமர்கள் குடிதுவன்றி யுலவாத செல்வநிலை
மெய்த்திருந்த தெனில்வேறு சால்புடைமை வேண்டுவதோ

அப்பதியிற் கருணீகர் மரபதனில் அரனடிக்கே
மெய்ப்பரிவார் உள்ளமொடு மேவுபெருந் தவமுடையார்
செப்புமுயர் கல்வியொடும் செழுங்கேள்வி மிகவுடையார்
கைப்பிலராய் நல்லொழுக்கம் கடவாது கடைப்பிடித்தார்; 5

சிவனடியார் எவர்வரினும் சிந்தையுவந் தெதிரேற்றுப்
பவமொழிந்த தெனமகிழ்ந்து பரிந்தடிசி லினிதூட்டி
அவர்விரும்பு வனவுதவி யடிபணியும் குறிப்புடையார்
தவமிதனிற் பிறிதுளதோ சால்புணர்ந்த அறிஞருக்கே. 6

இவ்வியற்கை யுடையவரை இராமையப் பிள்ளையென
ஒவ்வுமுறை இயற்பெயரால் உரைத்திடுவார் உலகோர்கள்
எவ்வமிலா திவர்வாழ்வில் ஈடுபடும் துணைவியராய்
செவ்விமிகு மனைவியர்கள் ஒரைவர் செலவுற்றார்; 7

இல்லறத்தின் கடமையெனும் அறம்பேணி இயற்றுமிவர்
நல்லுளத்தின் இயற்கையினை நானிலத்தோர் எளிதுணர
வல்லபெருஞ் சோதனையாய் வாய்த்தவிடை யூறெனவே
ஒல்லையுளம் பூண்டமையால் குலையாத வுறுதியொடும். 8

அன்பர்தமை யமுதூட்டும் அருங்கடமை குறிக்கோளாய்ப்
பொன்பொலியும் வயல்வளமார் பொன்னேரி எனும்பதியில்
இன்பமுறும் குலம்ஒழுக்கம் இலகுமுயர் குணமுடைய
மன்பெரிய குடியினிலோர் மடவரலை மணந்தனரால். 9

ஆறுகும் வரிசையினில் அடைந்தவராம் இத்தாரம்
பேறுகத் தன்கணவர் பேணிவரும் பணியதனை
மாறாத காதலொடும் கடைப்பிடித்து மனமிரண்டும்
வேறாகா தொருமையினால் விரும்பிமனை யறம்புரிந்தார்; 10

எப்பெரிய காரணந்தான் உளதெனினும் ஆடவர்கள்
கைப்பிலராய்ப் பலரைமணம் புரிந்தாலும் காரிகையார்
ஒப்பியவர் விரும்பும்வழி யொழுகிநிறை காப்பதுதான்
இப்பெரிய நாட்டினுக்கே இயல்பாகும் தனிப்புகழே; 11

அடுத்தடுத்து வருந்துயர மத்தனையும் ஈற்றினிலே
தொடுத்தபெரு நற்பயனைத் தோன்றும்எனும்ஆன்றமொழி
கெடுத்தவுதா ரணமாக இலகியதால் இவர்வாழ்க்கை [க்
முடித்தபழ வினைப்பயனால் முந்துமவை யுணர்பவரார். 12

ஒருமையுணர் வுடையவராய் இருமைபெறற் குரியாராம்
இருவர்களு மில்வாழ்க்கை இயல்பறிந்து நல்லாற்றிற்

பெருமைபெற வாழ்ந்திட்டார் பீடுடைய இவரவ்வூர்
உரியகணக் குகள்வரையும் உரிமையுடைய யவராயும்; 13

உள்ளூரிலும் புறஞ்சார் ஊர்களிலும் உளசிறுவர்க்
குள்ளூறக் கல்விதனை யுணர்த்துவதாம் பணியினையும்
எள்ளாமல் ஏற்றிருந்தார் எவ்வினைதான் செய்திடினும்
கள்ளார்பூம் பொழிற்றில்லைக் கண்ணுதலை மறந்தறியார். 14

தாரணியி லிக்கடமை தாங்குனருட் பெரும்பாலோர்
காருணிய மற்றவராய்ப் பொருள் திரட்டும் கருத்தினையே
நேர்குவரென் றிடுமொழியை நீக்கினரா லிங்கிவர்தம்
சீரியதாய்த் தூய்மையொடும் செயலாற்று முறுதியினால்; 15

பாசவுணர் வினைப்பெருக்கும் நூல்களையே பயிலாமல்
ஈசனிலை தனைவிளக்கு மிறைநூல்கள் பயின்றமையால்
மாசகலு முழுஞான மணிவிளக்கை மகவெனவே
பேசவரும் புகழ்சிறந்தார் பேறிதனிற் பெரிதுளதோ. 16

ஓங்கியநற் கல்வியொடு கேள்வியுமிக் குடையவராய்
தாங்கறத்தின் கடமைவழா தொழுகுவதே தலையான
பாங்குடமை யெனவுணர்ந்த பரிசுவழா துவகையொடும்
ஈங்கிவர்கள் ஒழுகுறுநாள் இறைவர்திரு வருளாலே. 17

இகப்பேரு யுலமெலா மெண்ணியரு நோன்பியற்று
மகப்பேறும் வாய்த்தனரால் வரிசைவழா தொருநால்வர்
உகப்பேறு மிருபுதல்வர் ஒண்டொடியார் இருவரென
மிகப்பால தாமகிழ்ச்சி மேம்பட்டார் குறையறவே. 18

இவ்வாறிங் கிவருறையும் காலமதில் இளமதியம்
செவ்வேணிக் களித்தபிரான் திருவருளின் செயலாலே
கவ்வாநின் றிடுபசியால் களைத்தவொரு சிவயோகி
அவ்வூரை யடைந்திவர்கள் வாழுமரு மனையடைந்தார். 19

வெண்ணீறுங் கண்டிகையும் விளங்குதிரு மேனியராய்
விண்ணேறும் கதிரவன்றன் விரைந்தேறு முச்சியினில்
நண்ணுநின் றுணவளிக்க வேண்டினரால் நானிலத்தில்
பெண்ணுவார் தமக்கெல்லாம் பெருமை தரும் குணவதியை.

பொன்னம்மை நிகர்பொலிவும் புவியம்மை நிகர்பொறையும்
என்னம்மை சிவகாமிக் கினியர்வரின் எதிரேற்கும்
சின்னம்மை யெனவுலகோர் தேர்ந்தழைக்கும் திருப்பெயரே
மன்னம்மை யிவர்பண்டை மாதவத்தின் பயனாலே. 21

உற்றவர்கள் பசியகல வுவந்தூட்டி யுபசரிக்கும்
பெற்றியினை யுடையவிவர் வந்தடைந்த பெருயோக
நற்றவரை யடிபணிந்து நயந்தடிசில் விரைந்தமைத்து
மற்றவரை யன்புடனே வழிபாட்டி னமுதளித்தார். 22

ஆதரத்தோ டறுசுவையின் னமுதளித்த கருணீகர்
மாதிவர்தம் செயல்மதித்து மனம்குளிர்ந்த சிவயோகர்
பூதியளித் தெனைப்போலோர் புத்திரனை விரைவினிலே
ஈதியென வருளாசி யியம்பியெழுந் தகன்றனரே. 23

அந்நாளே பொன்னுளா யாசிமொழி வாசியதாய்ப்
பொன்னேரி யம்மையிவர் புனிதமுறு மணிவயிற்றில்
தன்னேரங் கருவுகுவாய்ச் சமைந்ததுவால் மலத்திமிரம்
பின்னுகத் திருவருளின் பிரகாசச் செழுமுதலே. 24

துன்மார்க்க விருளொழியச் சோம்பலறச் சுத்தசிவ
சன்மார்க்கப் பரிதியெழத் தனிக்கருணை முரசொலிப்பப்
பன்மார்க்க வாதமெனும் பனிப்படலம் மறைந்தொழிய
மன்மார்க்கம் சிறந்ததென வானவரும் முடிதுளக்க. 25

புத்துருவிற் றமிழ்மொழிமான் புனையெழிலிற் பொலிந்திலகச்
சித்தியெலாம் சித்திபெறச் சிவயோகம் யோகமுற

சத்தியமும் அருளொழுக்கும் தமனியப்பொற் றவிசேற
நித்தியமாம் ஞானநிலை நிலவுலகிற் பெருகியெழ; 26

கோதில் சமரஸ ஞானக் குடைவிரியக் குவலயத்தே
பாதகமாம் படுகொலையும் புலைவிருப்பும் பரிந்தகல
நீதியறக் கொடிவிசும்பில் நின்றொளிர எவ்வுயிர்க்கும்
தீதிழையா அன்புணர்ச்சி தேக்கிநிறைந் தலைமோத; 27

ஒருயிரை யும்படைத்தற் குரிமையிலா மானிடவர்
ஆருயிரைக் குறைப்பதனுக் கருகரலர் எனுமுறையைப்
பேருலகில் உணர்வுடையோர் பெற்றுவப்பப் பிறப்பதனால்
சாருமுயர் வெனுமோகம் தலைகவிழப் பண்டிதர்கள். 28

கல்வியினாற் கேள்வியினாற் கவியியற்றும் திறமையினால்
சொல்விநய நாவலத்தால் உரைவிளங்கும் சூழ்ச்சியினால்
நல்வசன நடையதனால் நமக்கிணையார் என்றுளத்திற்
புல்குசெருக் கத்தனையும் புலர்ந்துலர்ந்து பொடிபடவும்; 29

கலிநாலா யிரமதன்மேற் கண்டதொளா யிரத்திருபான்
பொலியைந்தார் சுபாநுவெனும் புண்ணியப்பேர் ஆண்டதனில்
இலகுபுரட் டாசிமதி யிருபானோ ராம்திகதி
தலைமைபெறும் சுடர்வாரம் சார்மாலைப் பொழுதினிலே. 30

பொன்னவனார் இராசியெனப் புகல்மீன லக்கினத்தில்
தன்னியற்பேர் தனக்கேற்பத் தனிஞானக் குருபரனைப்
பின்னுலகில் அருளாட்சி பெற்றிடுமோர் ஆண்மகவை
அன்னையெனும் சின்னம்மை அருந்தவத்தி லீன்றனரே. 31

உயிர்நேயம் உயிர்த்ததுவால் உள்ளிரக்கம் சுரந்ததுவால்
அயர்வென்ப தயர்த்ததுவால் அருள்கனிந்து பழுத்ததுவால்
செயிர்தீய்ந்து கருகியதால் சிந்தைமயல் மயங்கியதால்
துயர்போக்கும் பெருங்கருணைச் சோதிமக வுதித்தமையால்-

## வேறு

மாய்வுறும் இவ்வுடல் மாய்வு றுவகை
வாய்தரும் அருட்பிர காச வள்ளலைச்
சேய்தன தெனவுணர் செல்வ மெய்திய
தாய்தவம் ஈதெனச் சாற்ற லாகுமே. 33

புண்ணியர் ஆண்மையர் புலவர் ஞானியர்
மண்ணுலக காள்பவர் யோகர் மாதவர்
எண்ணுபற் பலரையு மீயு மாண்பினல்
பெண்ணினிற் பீடுறும் பிறவி யாவதே. 34

வானவர் குரவனுய் மருவும் பொன்னவற்
கானதோர் ஆட்சியா யறைய நின்றிடு
மீனலக் கினந்தனில் வினையி லான்வர
ஞானவா னெனுமொழி நனிசி றந்ததே. 35

ஆயுளின் காரகன் அமைய மூன்றினில்
நாயக னும்குரு நான்கில் நன்குற
தீயசேய் நீசனுய்க் கேது சேர்ந்துறக்
காயுமா தவன்புக ரோடு கன்னியாம். 36

ஏழிடத் தெய்திட இந்து மைந்தனே
டுழினி லெட்டினி லுறுதி பெற்றிட
சூழ்பதி னென்றினிற் பாம்பு துன்னிட
வாழிய ஜாதகம் வகுக்க நின்றதே. 37

தீச்செயற் காரகச் சேயும் தையலார்
பூச்சினில் மயக்கிடும் புகரும் இங்கிதில்
நீச்சமாய் ஒடுங்கினர் நிமல ஞானிபால்
மாச்சரி யத்தினை வளர்க்க வஞ்சியே. 38

நடுநிலை யுயிரெலாம் நயப்ப ஓதிய
அடிகளார் திருவவ தாரம் செய்திட

இடையுறு நாளதா யிலங்கும் சித்திரை
உடுவுமப் பேற்றினுக் குரிய தாயதே. 39

விண்ணில்மூன் றும்பிறை விளக்கம் காண்பவர்
மண்ணுவர் பழியென மதிப்பர் தன்னெதிர்
நண்ணினோர் இடர்தபும் நாதன் றானுமவ்
வொண்மதி யெழுகையில் உதித்திட் டாரரோ. 40

முத்தொழி லியற்றிடு முதன்மை வாய்ந்திடும்
சத்திகட் குரித்தெனச் சாற்றும் கன்னிமா
தத்தினிற் சித்திகள் தமக்கு நாயகன்
இத்தரை யுதித்தமை யியல்ப தாகுமே. 41

ஏதமில் சித்தர்தம் இனத்தர் போற்றிடும்
நாதனுய்ச் சிறந்திடும் நலத்திற் கேற்றிடும்
ஓதுறும் கோட்கெலாம் ஒளிவ ழங்கிடும்
ஆதவன் தினத்தவ தாரம் செய்ததே. 42

கிளர்புவி மாந்தர்கள் வினையின் கேட்டினுல்
தளர்நிலை யொழிந்தருட் சாந்தி மேவிட
வளர்பெருங் கருணைகூர் வள்ளல் தோற்றமும்
வளர்பிறை தனிலிது வழக்க தாகுமே. 43

## வேறு

ஆசி லாச்சிவ யோகியர் அருளிய படியே
தேசு லாமிள ஞாயிறு போன்றெழில் திகழும்
மாசு தீர்த்தருள் ஞானமா மகவினைக் காணூஊ
ஈச னுர்அருள் ஏத்தினர் ஈன்றவர் மகிழ்ந்தே. 44

புல்லு மாயையின் புணர்ப்பறச் சிவனருள் பேணும்
வல்ல மாதவர் அருளிய வாய்மைதான் வழாமல்
ஒல்லை வந்தவ தரித்திடும் ஒளியுறு மகவைச்
சொல்லி ராமலிங் கப்பெயர் சூட்டினர் துலங்க. 45

திங்கள் ஐந்தினிற் றந்தையார் திருச்சிற்றம் பலத்தே
வெங்க ணுகம்வன் புலியொடும் வியந்தெதிர் போற்றும்
மங்கை பாகனைத் தெரிசன மரபினிற் காண
அங்கை யேந்திய குழவியோ டணைந்தனர் அருகே. 46

அருத்தி கூர்தரும் ஆநந்த வல்லியோ டினிதே
நிருத்த மார்தரு நிமலனை நோக்கலும் விரைந்தே
கருத்தெ ழாவிளங் குழவிதான் கலகல வெனவே
சிரித்த செய்கையின் உண்மையை யுணர்ந்திலர் திகைத்தார்.

குழவி வாயிள நகையினைக் கூர்மையி னேக்கி
வழுவில் அப்பைய தீக்ஷிதர் என்பவர் மகிழ்ந்தே
தழுவும் நும்மக வன்றிது தமனிய மன்றுள்
அழக னுர்அருட் பிள்ளையே யீதென அறைந்தார். 48

பெறல ருந்திரு மைந்தனைப் (பெற்றவனென)
உறவ ரும்புக (ழுருந்) தவம் உலந்ததா தலினுல்
அறவ ணுமிரா மையனுர் அரனடி நீழல்
உறவு கூர்ந்தனர் ஆண்டரை யிவர்க்குறு மளவில். 49

## வேறு

மன்று ளாடி மகவிது நும்மக
வன்றெ னுமுனம் அந்தணர் கூறிய
தொன்று மாறிங் குவப்புறும் தந்தையார்
இன்றிம் மண்ணுல கின்ப மிறந்தனர். 50

திருவவதாரம் முற்றிற்று.

——

# இளமை

தள்ள ரும்தவத் திக்குடி யிற்றலைப்
பிள்ளை யாகும் சபாபதிப் பேரினேன்
விள்ளு மிம்மரு தூரை விடுத்திவர்
எள்ளில் மாதுல ஞர்பதி யெய்தினர். 1

பெற்ற தாயின் பிறந்தகம் தன்னிலே
உற்றி ருந்து சிலபகல் ஓங்குசீர்
பெற்ற சென்னைப் பெரும்பதி யேகியே
மற்றி யாவரும் வைகினர் பிற்பட. 2

சாற்றுங் கச்சித் தமிழ்மொழி மாண்புணர்
பேற்றி னேனற் சபாபதிப் பேரினேன்
பாற்ற மிழ்க்கலை யோர்ந்து பயின்றனன்
ஆற்றி னிக்குடி முன்வரும் அண்ணலே. 3

மூத்த மைந்தன் முயன்று தமிழ்மொழி
ஏத்து நாவல மெய்தி யிருஞ்சபை
பூத்த நற்பிர சங்கம் புரிதலே
வாய்த்த தன்றொழி லாக வதிந்தனர். 4

தொன்மை நூற்பிர சங்கம் சுவைபட
நன்மை யாற்றில் நனிபொருள் கொண்டிவர்
இன்மை யின்றி யிவர்தமை யோம்பினர்
தன்பின் வந்திடும் தம்பிய ரோடவண். 5

கொள்ளும் ஞானக் குருபர ளுகிய
வள்ள லாரை யுலக வழக்கினல்
பள்ளி யுய்த்தனர் பற்றுமைந் தாண்டினில்
உள்ள லாகு மதோஇவர் உண்மையை. 6

ஒன்ப தாண்டில் உயர்திரு நாவலர்
தன்னி டத்திற் பயின்றிடச் சாற்றினர்
அன்பி னலிவர் மாண்பை யறிகிலார்
முன்பி றந்த வுரிமையின் மொய்ம்பினேர். 7

உலகர் கொள்கை யனைத்திலு முள்ளுற
விலகி நிற்கும் குறிப்பு வெளிப்படா
தலைகொள் வாரி யடங்கிய பான்மையின்
இலகி னற்பிறர் எங்ஙன் உணர்குவார். 8

பாடம் போற்றிப் படித்திலர் என்றுளய்
ஊடி னருடன் வந்தவர் உற்றிவர்
நீடுங் கந்தர் நிலையத்தில் நித்தலும்
கூடி நற்றுதி கூறுதல் ஓர்கிலார். 9

கந்த கோட்டக் கடவுளி னலயம்
வந்துபோற்றி வழிபடும் கொள்கையும்
செந்த மிழ்த்தொடை சூட்டும் சிறப்பையும்
அந்த ரங்கக் கடமையில் ஆற்றினர். 10

ஆயி னும்இவர் அண்ணன் குருவிடம்
மேய பாடம் பயின்றில ரென்றுளம்
காயுந் தன்மை யுணர்ந்தபின் கல்வியை
நேய மாகப் பயில்நெறி நேர்ந்தனர். 11

தன்ன றைக்கண் தயங்குகண் ணடிமேல்
வன்னப் பூமலர் மாலை வயக்கியே
மன்னி நேரில் வழிபட மற்றதில்
இன்னல் தீர்க்கும் தணிகையி லீசனர். 12

உருவந் தோன்றி யொளிர்ந்திடு மங்கதன்
திருமு னின்று செழுமறை யாகமம்

பெருகு மெண்ணெண் கலைகளும் பீடுறப்
பருகி னாரெளி திற்பரி வாகவே. 13

முரண வித்தை யொழிக்கு முதல்வனார்
பிரண வத்தை யுணர்ந்திடப் பேசிய
பருணி தக்குரு வேமுன் பயிற்றிடக்
கருணை வித்தி யுணர்த்தினர் காதலால். 14

சிந்தை தன்னிற் செறிந்த சிவகுரு
தந்த கல்வி தழைத்திட நாடொறும்
முந்து போத முதிர்ச்சியில் இங்கிவர்
பந்தம் நீங்கிப் பரவச மாயினார். 15

## வேறு

ஒன்பதா மாண்டின் மேலே யுளமதில் நிறைந்த போதம்
அன்பொடு முயிர்கட் கெல்லாம் அருள்குறிக் கோள தாகி
இன்புற விறைவற் பாடு மிச்சையும் வளர்வ தாகி
மின்புரை வடிவேற் காளை வியனருள் மேவினாரால். 16

இன்னவா றெழுகு நாளில் இவர்முனம் பிறந்து மேற்கொள்
முன்னவன் முறையி லாற்றும் பிரசங்க முயற்சிக் கொவ்வாத்
தன்னுடல் சுகமின் றாகத் தம்பியை விளித்தாங் கெய்தி
இன்னிசைப் பாடல் ஒன்றை யிசைத்திட ஏவி னாரால். 17

அரிதினி லதனை யேற்றே யவையினை யடைந்தாங் குள்ளோர்
தெரிதரத் தமைய னாரின் திருவுடல் சுகமி லாமை
உரைசெய்தே யனையார் இட்ட கட்டளை யுரிமை யாலே
பெரியபு ராணந் தன்னிற் பேசிடத் தொடங்கி னாரே. 18

அன்றிவர் நவில வேண்டி யமைந்தது காழி வேந்தன்
தன்றிருக் காதை யாகச் சார்ந்தது தவறி லாதோன்
நன்றுரை விரித்தார் கங்குல் நடுநிசி யளவு முற்றார்
ஒன்றிய செய்யுள் ஒன்றே முடிந்தில திதனை யோர்ந்தோர்.

திகைத்தனர் அவையில் இந்தத் திருமிகு குமரன் கற்ற
வகைத்திறம் என்னே என்று வழுத்தினர் இவரே யந்நூல்
தொகுத்துரை வழங்கு மாறும் வேண்டினர் துணைவ ஞரை
அகத்தியற் கிணையா மிந்த ஐயனு மிசைத்திட் டாரால். 20

மாதவத் தம்பி யார்சொல் மாண்பினை மறைவா யோர்நாள்
காதல்கூர் தமைய னின்று கருத்துறக் கேட்ட காலை
மேதகு வியப்பி ேைடு விம்மித முடைய ராகி
ஏதமில் மனையை யெய்தி யில்லுறை மாதை நோக்கி. 21

தம்பியென் றிதுகா றுள்ள மதித்தது தவறே யாகும்
எம்பெரு முருக வேளே யிவனென வுணர்ந்தேன் இன்னன்
இம்பரிக் குடியிற் றேன்ற இழைத்திடு தவந்தான் என்னே
நம்புதி யினிநீ யென்ன நவின்றனர் மகிழ்ச்சி யோடும். 22

அன்றுதொட் டவரும் இன்னர் திறத்தினில் அன்பு பூண்டு
துன்றிய பத்தி யோடும் தொழுதுளத் தமைவ தானர்
இன்றிவர் குறிக்கொள் பான்மையுணர்ந்ததால்இளவலாரும்
நின்றிடு மனையின் பந்தம் நீத்தனர் மருவு றுமல். 23

## திருவொற்றியூர் வழிபாடு

சிட்டர்தொழும் தவராஜ சிங்கமெனத்
தமிழுலகம் சிறப்பிற் போற்றும்
பட்டினத்தா ரெனுமடிகள் பரமவுப
சாந்தநிலைப் பரவை தோய்ந்து
தொட்டிருக்கும் திருத்தலமாய்த் தோன்றுபிர
ளயத்தழியாத் தூய்மை வாய்ந்த
மட்டிருக்கும் மலர்ப்புன்னை மருவுகழிக்
கானல்வள மருவும் சூழல். 1

மடம்புக்கோர் மதித்தறிய முடியாத
மாமணியாய் வரையா ஞானத்
தடம்புக்கோர் யோகியர்கள் தவமுதல்வர்
சாந்திபெறத் தழுவும் சார்பாய்
இடம்பக்க மரகதத்தின் எழில்வடிவக்
கொடிபடர விலகா நிற்கும்
படம்பக்க நாயகனுர் கழல்பரவும்
பற்றுளத்திற் பரித்திட் டாரால். 2

விழுத்தவர்கள் வெண்மணலின் வடிவாகி
விரவுதல மெனவே போதம்
பழுத்தவர்கள் வியந்துரைக்கும் ஒற்றிவளர்
அனற்பிழம்பைப் பரமா னந்த
எழுத்தறியும் பெருமானை யெய்தியநு
தினம்பணிந்தார் எளியேன் செய்யு
முழுத்தவறும் பொறுத்தருளும் இராமலிங்க
வபிதான முனிவன் ருனே. 3

அணிவிடங்கப் பெருமானுய் ஆரணமும்
கண்டறியா தாடல் கூரும்
மணியரங்கா மொற்றிநகர் மன்னுபரம்
பொருளிவரை மகிழ்வா யேற்றுத்
தணிவிலருட் பெருக்காட்டித் தாரணிக்கோர்
தனிக்குருவாய்த் தாமஞ் சூட்டிப்
பிணிகொளுயிர்க் கிதம்புரியும் பெருங்கடமை
யேற்றிடுமா பிறக்கி னுரே. 4

சென்னைநகர் தனிலாறு மயிலளவிற்
செறிந்துதிகழ் திருவார் ஒற்றி
மன்னுமுழு முதலவனுர் மலரடிகள்
அநுதினமும் மரபா லேத்த

அன்னைதனை விரைந்தணைய வருமகவு
போன்றமையாக் காத லோடும்
முன்னுவரால் உடன்சிலரும் தொடர்ந்துவர
வழுவாத முறைமை யாலே. 5

ஞானமணி விளக்கனைய தன்னுருவம்
பிறர்காண நயவா ராகிப்
பானிறவெண் தூசதனால் மறைத்தொதுங்கி
யோர்புறமாய்ப் பணிவோ டேகி
வானிமிரும் ஆலயத்தை வலம்புரிவார்
வருங்காலை வடிவேற் காளை
தானமரும் சந்நதிமுன் தனைமறந்து
நெடுநேரம் தாழ்க்கிற் பாரால். 6

இச்சையெலாந் துச்சமென இளமையிலே
களைந்திருந்தும் எவரோ டேனும்
வச்சையொடும் உரையாடார் உயரியதெற்
றிகள்மீதும் உறையார் கால்கள்
எச்சமயத் தினும்நீட்டி யிருந்தறியார்
அருள்நிலையே குறியா யேற்று
நச்சுதமிழ்ப் பாமாலை உளநிலைக்கோர்
சான்றாக நவில்வா ரம்மா. 7

பள்ளியுறு மாணவர்கள் பயின்றிடவே
வசனநடை பகர்நூ லொன்றைப்
பிள்ளையிவர் வரைந்துதவ மாபுலமைப்
பெரியோன் வேண்ட
விள்ளுமநு நீதிகண்ட வாசகத்தை
விரித்தனரால் விரகி னேரும்
உள்ளுருக உடலுருக உயிர்உருகத்
தமிழணங்கும் உருகு மாறே. 8

சென்னையினில் அதுகாலம் செறிந்திருந்த
தமிழ்ப்புலவர் பலரும் சேர்ந்து
பன்னுதொண்ட மண்டலமா பகர்தொண்டை
மண்டலமா பகர்தல் நீதி
என்னுமிதை யிலக்கணத்தின் முரணுகா
முறைமையினுல் இயம்பல் வேண்ட
உன்னுதொண்ட மண்டலமே யுரியதென
முறையுணர்த்தி யுதவினுரே. 9

உரைவிரிக்கும் பெருந்திறனுக் குற்றவுதா
ரணமாக உயர்வே தாந்தக்
கரைவிரிக்கும் ஒழிவிலொடுக் கத்திலுறும்
காப்பினுக்கே கரைந்தார் ஓர்ந்து
தரைவிரிக்கும் பொருளதுதான் சாற்றுசிதம்
பரமுனிமுன் தருத லாலே
விரைவிரிக்கும் பழந்தவத்தின் வித்திவரென்
றெளிதுணர்ந்தார் விரகினேரே. 10

தொழுவூர்வே லாயுதப்பேர் தொல்கவிஞர்
இவர்பெருமை துணியா ராகிக்
கெழுகடின நடையினிலோர் பாமாலை
சிலேடையுறக் கிளந்தே தொன்மைப்
பழயபனை யோலையினில் வரைந்துசங்கப்
பாவிதெனப் பகர்ந்தார் நோக்கி
விழுமியதன் றிதுகற்றுக் குட்டிகள்பாட்
டெனப்பிழைகள் விளக்கி ஞரால். 11

அன்றுமுதல் அவரிவருக் கடியவராய்
அருங்கலைகள் அலகிலாது
நின்றுவட மொழியினெடும் நேர்ந்துதெளிந்
தார்இவர்தம் நேர்மை நோக்கி

ஒன்றியவன் பதனுலே உபயகலா
நிதிப்புலவ ரெனஒர் நாமம்
நன்றிலகச் சூட்டினரால் ஆறெழுத்தி
னுபதேச நலத்தி னேடே. 12

அந்நாளிற் பலரெய்தி ஐயனருட்
சிறப்பதனை அறிவால் நோக்கி
நன்னேயத் தொண்டர்களாய் நயந்தொழுகிப்
பெரும்புலமை யடைந்தார் அண்ணல்
தன்னேய வுணர்ச்சியினுக் கிடையூறும்
இம்முறைகள் தரியா ராகிப்
பின்னுகுந் தனியிடங்கள் தேடியடைந்
துள்ளமைதி பெரிதுற் ருரால்: 13

## வேறு

அஞ்சிவ நேச வெண்பா அருளின தன்றி மக்கள்
நெஞ்சறி வுறுத்த லென்னும் நிதியையு முதவி வேதம்
விஞ்சிய கருத்தீ டாக வியன்மஹா தேவ மாலை
செஞ்சுவைத் தொடரும் யாத்தார் திருவருட்கருணையாலே:

வள்ளலா ருடனே யொற்றி வழிக்கொளு மிருவர் ஓர்கால்
விள்ளுமோகினிதான் தாக்கவெருண்டனர் விமலன்பிச்சென்
றெள்ளலு மறைந்த தன்மை யோர்ந்தனர் இறும்பூதெய்தித்
தெள்ளிய பூதி யேற்றுத் தெளிந்தனர் உவகை மேவி. 15

மற்றெரு நாளில் அன்பர் மருவின ருடனே போத
ஒற்றியூ ரெய்தி யீசன் தெரிசன முவந்து போற்றித்
தெற்றியிற் றுயின்று பின்பு தெளிந்தெழும் பசியால் நைய
உற்றெரு குருக்கள் அன்னம் உதவினர் மறைந்தார் அன்றே:

ஒற்றியில் இரவி லோர்கால் உறங்கிய பொழுதோர் கள்வன்
மற்றிவர் வலது காதின் அணியினைக் கழற்ற ஓர்ந்து

நற்றவர் இடது காதும் காட்டினர் நசையா லன்னுன்
பெற்றிடக் கருணை யாலே பெரியவர் இயல்பீ தன்றே. 17

ஒருமையார் அன்பு கூர்ந்த வயிணவ வுடன்பா டுற்ருேர்
கருதிய படியே அன்ஞர் களிப்புற முறைவ ழாமல்
குருபரம் பரைப்பிர பாவம் விரித்தனர் குறிப்பி ஞலே
அருமையென் பதுமொன்றுண்டோ அருட்பெருஞ்செம்ம
லார்க்கே. 18

சென்னையிற் சோமு செட்டி யென்பவர் வீட்டிற் சீலன்
மன்னிய தமிழ்ச்சொன் மாரி வளமுறப் பொழியும் காலை
அன்னவர் அன்பி ஞலே அளித்தபொற் றிரள்க ளெல்லாம்
பின்னவர் மனைமீ தோட்டிற் பெய்குவர் விருப்பு ருமல். 19

இவர்செயல் உணர்ந்த பின்னர் இல்லுறை யதிப ராகும்
அவரிவர் தமைய ஞர்பால் ஊதியம் அளிக்க லாஞர்
கவர்தரும் உளத்தோர் வேட்கும்பொருளினைக் கனவிலேனும்
தவநிலை யாளர் ஏற்கத் ததுவரோ தாழ்வு கூர. 20

மிகுமுல கியலில் உள்ளம் விழைவுரு நிலைய ராயும்
இகலறக் குடியி லுற்ருேர் இசைவுறும் பரிவுற் ருேர்கள்
வகைகளில் இசைவுற் ருர்போல் மருவிய பணிவு காட்டிச்
சகநிலை மாந்தர் தேருத் தன்மையில் ஒழுக லாஞர். 21

திருவருள் வாரி தோய்ந்து திளைத்திடும் தம்பி யார்க்கு
மருளுறு மணமொன் ருற்றி மகிழ்வுற நினைந்தார் ஈன்ற
தெருளுறு மனையு மூத்த திறமுறும் தமையன் மாரும்
இருள்ஒளி யியற்கை தேர்தற்கொண்ணுமோ இயல்பி ஞலே.

## வேறு

பிள்ளைப் பெருமான் பலமுறையும்
பெரியோர் உரைக்கு மன்றல்வினை
உள்ளக் கிடக்கை தனக்கேற்ப
மிகவு மறுத்து மொழியாராய்

விள்ளூற் றிடவோர் சிவயோகர்
முகத்தால் வேண்டி வலியுறுத்தார்
எள்ளூற் றவர்சொல் முரணாமல்
இசைந்தார் உலகர் நிலைக்கிரங்கி. 23

எண்ணாராகி யிவர்நிலையை
யுரியோர் இவர்முன் புதித்தவராம்
உண்ணாமுலைப்பேர் அவ்வைதரு
மகளா யுரைக்கும் தனம்எனும்பேர்
பெண்ணே மனையாம் பெயருலகிற்
பிறங்க மணந்தான் பிறக்கினரால்
விண்ணோர் வணங்கு மெய்த்தவரின்
விரகை யுணர விழியிலராய். 24

விரிபே ருலகர் பேரின்ப
வீட்டில் நுழைய விடுத்தருளும்
ஒருமா தவரை ஓரறையிற்
பெய்தார் மணஞ்செய் பேதையொடும்
திருவா சகத்தை மெல்லெனவே
தினமு மோதும் நியமமுடைக்
குருவா மிவரும் அந்நூலே
கொண்டவ் வறையுட் குறுகினரால். 25

சென்றது மாங்கே யுற்ற திருவிளக் கதனைத் தன்பால்
நின்றிடு மனைவி யாரைக் கொணர்கென நிகழ்த்தி னாரால்
அன்றவ ரியற்கை யாய நாணினால் அதுசெ யாமல்
ஒன்றினர் முகங்கொ டாமல் விதிவழி மதிய தன்றோ. 26

கடமையைக் கருதியேயோ கனிவுறு மிரக்கத் தாலோ
மடமையை யகற்ற வேயோ மானவன் பணித்தான் முன்னைப்
படுபவத் தொடர்பி னாலப் பணியினைப் புரியா ராகி
அடைவுறு மவுன மேற்றார் அண்ணலும் தாழ்த்தி டாமல் 27

அத்திரு விளக்கைத்தானேகொணர்ந்தயல் அமைவித்தன்பர்
புத்தக மதனைக் கங்குல் புலர்தரு மளவும் கண்கள்
தத்திவீ ழருவி பாயத் தனித்தபே ரின்ப மோங்கப்
பத்தியி லோதி யோதிப் பரவச வுணர்ச்சி கூர்ந்தார். 28

திருவா சகமாம் தெய்வதநூல் உதவும்
தேனைத் தினம்பருகி
ஒருவா தறையுட் டனித்தசுகத்
துறைந்தார் இதனை யுணர்ந்தவராய்
அரிதா கியதம் முயற்சியெலாம்
அவல மாய நிலைநோக்கித்
தரியா ராகிக் கிளைஞருளம்
தளர்ந்தார் வருந்தித் தமதியல்பால். 29

கொள்ளு மமுதப் பசுங்கிரணம்
கொழிக்கும் நிலவைப் பருகுமியற்
புள்ளும் அனலின் வெம்மையினைப்
புலங்கூர்ந் தணுக விழைவுறுமோ
விள்ளு மயன்மால் தமக்கரிதாய்
விளைந்த ஞான போனகந்தேர்
வள்ள லுலகர் புன்னிலையில்
வாய்க்கும் இன்ப மருவுவரோ? 30

---

# சித்தி விளக்கம் அல்லது அருட்செறிவு

சுற்றமா யமைந்தோர் உள்ளந் துயருழந் தவல மெய்தப்
பற்றிலா தகத்தே யிடில் பரம்பரன் அருட்டேன் மாந்தும்
நற்றவர் மரபி னுலே நலமுணர் அன்பர் சூழ
ஒற்றியூ ரணுகி மீளும் உறுதியிற் செறிந்திட் டாரே. 1

பட்டினத் தடிகள் கோயில் பரவியே யோக மாற்றும்
சிட்டராம் அம்மை யாங்கு செறிவுறும் வள்ள லாரை
இட்டமாய்ப் பணிந்தார் இன்னுர் பிடிமணல் வாரி யீந்தார்
திட்டென அவைகள்எல்லாம்இலிங்கமாய்த் திகழக்கண்டார்

தமையனுர் மருக ராகித் தனதுமா ணவரு மாகி
அமைவுறும் சுந்த ரப்பேர் அன்பர்தம் வறுமை கூற
எமையுடை யொருவன் பாலி னெய்திநம் வறுமை தீர்வோம்
கமைபெறக் கடவீ ரென்னக் கழறினர் கருணை யாலே. 3

ஒருதினம் வியாஸர் பாடிக் கன்பர்கள் உடனே செல்ல
வருபெரும்பாம்பொன் றின்னுர் வழிக்கெதிர்போ தல்காணு உ
வெருவின ராகி யோடி விலகினர் உடன்சென் ருேர்கள்
அரவிவர் அடிகள் தம்மைப் பிணித்ததால் அவலம் தீர. 4

பிள்ளையார் சிறிது போழ்து பெயர்ந்திடா தாங்கே நின்று
ஒள்ளிய அரவை நோக்கி விலகென உரைசெய் திட்டார்
தள்ளரு மாணை யாலே தவிர்ந்தயல் விலகி யேகிற்
றுள்ளுணர்ந் துரைக்க லாமோ ஊங்கிவர் பெருமை நாயேன்

அயலுறும் சுந்த ரப்பேர் அடியரோர் நாளிற் றன்பால்
பயிலுமா ணவர்கள் தம்மைப் பரிவிலா தடித்தா ரென்னச்
செயிரிலா வள்ளல் கேட்டுச் சிந்தையில் வருந்தித் தன்மேல்
இயைவுற வாணை கூறிக் கடிந்தனர் இனிச்செ யாமல்; 6

வடிவுடை யுமையாள் வாழு மாசில்சந் நதிமுன் போர்நாள்
அடைவுறும் வள்ள லார்முன் பந்தணர் ஒருவர் தோன்றி
உடையநால் வேத சார சங்கிரகம் எனுமோர் ஓலே
யிடைவரை சுவடி தன்னே ஈந்துடன் மறைந்திட் டாரால். 7

ஒற்றியூர் தனில்நிர் வாண முடையவோர் துறவி தென்பால்
பற்றின ராகி வீதி படர்பவர் தமையெ லாமும்
குற்றமாய்க் கழுதை மாடு குறுகுவ தெனவே கூறும்
பெற்றியை யுடைய ராகிப் பிதற்றுவர் வழக்க மாக. 8

அத்தெரு வழியே யோர்நாள் ஆரியன் போதல் கண்டு
உத்தம மனிதன் போத லுறுகின்ரு ரெனவே கூறிப்
பொத்தினர் தனது மேனி புலர்ந்தனர் அச்ச மோடும்
வித்தகன் அவரை யண்மி விளம்பினர் சிலது மாற்றம். 9

தானெனு முனேப்பு நீங்காத் தவநிலே யுடைய அன்ஞர்
மானவன் கருணே யாலே வழுத்திய உபதே சத்தால்
மேனிமிர் உணர்வு கூடி விடியுமுன் பவ்வூர் நீங்கிப்
போனமை யுணர்ந்தார் மற்ருேர் புனிதரைப்போற்றிஞரால்

சங்கர பகவத் பாதர் சார்ந்தனர் சென்னே யின்ஞர்
புங்கமாண் பதனே யெல்லாம் பலப்பலர் புகலக் கேட்டார்
இங்கிவர் தம்மைக் காண விழைந்தனர் இவரு மாங்கண்
பங்கினி லகலா வேலா யுதரொடும் படர்வுற் ருரால். 11

வடமொழிக் கலேய தொன்றில் வாய்த்திடும் ஐயம் தன்னேத்
திடமொடும் விளக்கும் வண்ணம் விரித்தனர் வள்ள லார்தம்
முடனுறும் சீட ராய உயர்தொழு வூரி ஞரை
விடையளித் திடுமின் என்ன விளம்பினர் பணித்திட்டாரால்

கட்டளே சிரமேற் கொண்டு கழறினர் ஐயம் தன்னேத்
தட்டற அவையோர் தாமும் வியந்திடச் சழக்கி லாமல்

சிட்டர்தம் மருளை யேற்றார் செயற்கரும் செயலு முண்டோ
இட்டகல் லானை முன்னம் கரும்பயின் றினித்த தன்றோ.

அளக்கருந் தவத்தா லிந்த அவனியில் அடைந்த வள்ளல்
விளக்குதற் கரிய பண்பை வியந்தனர் எவரும் ஓர்கால்
துளக்கிய மழையா லன்பர் துயருறக் கண்டு நெஞ்சத்
திளக்கமுற் றொற்றி யூரை யிமைப்பினில் இவர்வித் தாரால்.

பசியினாற் களைத்த வன்பர் பலரையு மொருகால் அன்னை
இசையுமாலயத்தி லெய்த விசைத்தவ ளருளா லன்னம்
மிசைதர வருவித் தீந்தார் மெலிவகன் றிடவே யுண்டு
கசிவுறு மன்பி னோடும் கலந்தனர் வியப்பு ளோங்க. 15

அப்பக லுமையாள் ஈந்த அமுதினை வியந்தோர் மாலை
செப்பினர் உமைதன் பேரால் திருவருள் நாடிச் சார்ந்தோர்
எப்பெருங் குறைகள் தாமும் இரிந்திடப் பூதியீவார்
ஓப்பிலா ஞான சித்த ராகிய ஒருவர் தாமே. 16

நள்ளிர வகன்ற பின்போர் நாளினில் ஒற்றி யூரிற்
பிள்ளையார் துயின்று பின்பு விழித்தனர் பசித்தார் அப்போ
துள்ளிருந்தொருமாதெய்தியுடன்வரும்தமக்கை யார்போல்
எள்ளரும் இலையிற் பொங்கல் ஈந்துடன் மறைந்திட் டாரால்.

நற்றிரு வோங்கும் சென்னை எனஇவர் நவின் றபின்பே
உற்றிடும் கந்த கோட்ட முயர்வளம் செறிந்த தென்னச்
சொற்றனர் துலுக்கா ணம்வாழ் சுந்தர மாரி யன்னைக்
குற்றபஞ் சகமும் பாடி யுறுபலி நீக்கி னாரால். 18

வேண்டுவார் வேண்டி யாங்கு விவிதமாம் வகைக ளாலும்
ஆண்டனர் அடியர் இன்பம் அடைந்திடக் கருணை பூத்தார்
ஈண்டுசின் னாள்கள் இவ்வா றிருந்தபின் சென்னை நீங்கிக்
காண்டிடக் கனக மன்றம் கருதினர் காத லாலே. 19

——

## சிதம்பர தரிசனம்

சென்னையம் பதியை நீங்கிச் சிதம்பர வெளியி லாடு
முன்னவன் திருத்தாள் காண முதிர்ந்தெழும் காத லாலே
தன்னுடன் தொடரும் அன்பர் சிலரொடும் தகவார் வண்டி
மன்னுசா தனத்தினாலே வழிக்கொண்டார் மகிழ்ச்சி யோங்க.

ஆற்றினிற் புதுவை யென்னும் அணிநகர் எய்தி ஆங்கே
ஏற்றபல் லடியார் வேட்கைக் கிசைந்தனர் சின்னா ளாங்கு
சாற்றவே றிணையி லாத இவர்தனிப் புகழின் வாசம்
நாற்றிசை பரந்து மாந்தர் நண்ணினர் வியப்பி னாலே; 2

உற்றவர் குறைக ளெல்லாம் ஒருகணத் தகலு மாறு
முற்றிய கருணை யாலே துடைத்திடு முதல்வ ரென்னும்
பெற்றியை யுணர்ந்து நாளும் பெருகிய மாந்தர் கூட்டம்
பற்றிலா தவரை வையம் பரிவுறல் இயல்ப தாமே. 3

கொந்தமூர் ஸ்ரீநி வாஸ வரதர்என் றியற்பேர் கூறும்
அந்தண ராகும் ஆசான் தனக்குள ஐய மெல்லாம்
சிந்திட விளக்கி யார்க்கும் தெருளுரை வழங்கிப் பின்பு
முந்திய தில்லை மூதூர் அணுகினர் முதத்தி னோடே; 4

தில்லையம் பதியை எய்தித் திருச்சிற்றம் பலத்தின் கண்ணே
எல்லையில் திருக்கூத் தாடும் இறைவனை விரைந்து காணாவ
ஒல்லையில் விழிநீர் சோர உரைகடந் தறிவா நந்தம்
புல்லியே அழுதார் வீழ்ந்து பொருமினர் உரிமை யாலே. 5

பிறந்தபின் பைந்தா மாதம் பெற்றவர் கரத்திற் றானே
உறைந்துமா நடன நோக்கி உவந்துபுன் முறுவல் பூத்த
திறந்தனி லிருந்து பற்ப லாண்டுகள் திரிந்த தென்றோ
செறிந்துடல் புளகம் போர்ப்பச் சிந்தைநைந் துருகி னாரால்;

## வேறு

கள்ளக் காதல னிடத்தினிற் கரையிகந் தெழுமால்
உள்ளக் காதலி நிலைமையின் உவமையைப் பெரியோர்
விள்ளக் கேட்டனம் அங்கவர் வியனிலை மேவி
வள்ளற் கோமகன் பருகினர் மகிழ்மது வாரி. 7

தத்து வங்களுங் குழைந்தன தனித்தனி யுருகி
எத்து வந்தமும் தவிர்த்திடு மிருந்தவர் கனிந்தே
மெய்த்த சிந்தையிற் பாடினர் சூடினர் விழைந்தே
மூத்த ரானவர் முதமுறு மூர்த்தியைத் தொழுதே. 8

சொற்க ளால்அளந் தெவர்சொல வுரியவர் வயிரக்
கற்க ளாய்ந்திரு விழியிலார் கழறவும் படுமோ
விற்கொள் வாணுதல் விளங்கிழை உவந்திடப் பொதுவில்
நிற்கும் சோதியிற் றிளைத்திடும் நிருபனார் நிலையே. 9

## வேறு

சிதம்பர வெளியாய் நிற்கும் சிதம்பர மடைந்த வள்ளல்
சிதம்பர உரிமைப் பாடு தெரிதர எவர்க்கும் தெய்வச்
சிதம்பர விராம லிங்க மென்பதே திருச்சாத் தாக
இதம்பெற வரைய லானார் இருபொருள் விளங்கு மாறே. 10

பருவஞ்சார் மடந்தை வேட்ட பதிநகர் தனதா யேற்று
மருவுஞ்சால் பெனவே தெய்வ மணம்புரி தலைவ ராகக்
கருவஞ்சா வள்ளல் ஏற்ற காதல்கூர் தலைவர் வாழும்
அருவஞ்சார் தலமெ தற்கும் உரித்தெனல் அறிவித் தாரால். 11

ஆடக மன்றம் நீடும் பதியினில் அமருங் காலைக்
கோடக நல்லூர் வந்த கோதிலாத் துறவி யாகும்
நீடுசுந் தரப்பேர் கொண்ட நிருமலன் அடிக ளாரை
நாடிவந் தளவ ளாவி நயந்துளம் வியந்து நாணி. 12

தானெதிர் வீற்றி டாமல் ஒருபுறத் திருந்து தாழா
ஞானமாம் விடயம் பற்றி நாள்களோர் மூன்றும் வாதம்
ஆனபின் பறிஞர் தோல்வி யடைந்தனர் அவரை வள்ளல்
மேனிமிர் பரிவா லாற்றி விளம்பிய வகையி னுலே. 13

தோற்றவர் வாதந் தானும் தூக்கிய வெற்றி காட்டிச்
சாற்றினர் திறமை கண்டு சால்புறு மறிஞர் வள்ளல்
நீற்றினை யளிக்கு மாறு வேண்டினர் நிகரி லாத
ஆற்றல்சார் அடிகளீய மறுத்தனர் அமைதி யாக. 14

அன்னவர் தனது வேட்கை அமைவரி தாத லாலே
தன்னிட மிருந்த பூதி தனைஇவர் நுதலிற் சாத்தி
பின்னதைத் தானேஏற்றுப் பீடுற அணிந்தார் அன்னூர்
உன்னிய பிறர்க்கும் ஈந்தார் உளவறி அறிஞர் தாமே;

உற்றெதிர் உறுவோர் சத்தி அனைத்தையும் உடனேயீர்க்கும்
பெற்றிய சித்தர் என்னப் பேசினர் வள்ள லாரை
நற்றவர் மாத மாறில் நாள்உலந் திடுவா ரென்ன
மற்றிவர் தாமும் கூறி வருந்தினர் பிரிந்த காலை: 16

எந்நிலை யாய ஞானம் இயைந்தவர் எனினு மின்னூர்
முந்நிலை குறுகு வாரேல் மொழிதடு மாறி யுள்ளம்
தந்நிலை யுருகி அன்பே தலைப்படும் தகைய ராவார்
இந்நிலை அடிகள் தன்மை யென மதித்தியம்ப லாற்றூர். 17

தேனமர் பொழில்சூழ் தில்லைத் தலத்தினி லிருந்து சால்பார்
ஞானபோ னகரை ஈன்ற நலமுறும் காழி யேகி
ஆனசின் னுள்கள் வைகி அரும்பிணி யுழந்துளோர்க்குப்
பானிறப் பூதி நல்கிப் பருவரல் அகற்றி னூரால்; 18

மானவன் பவநோய் தீர்க்கும் வயித்திய நாதர் கோயில்
தானடைந் துலக நாதத் தம்பிரான் வேட்ட வாறே

ஈனமில் பதிகம் பாடி ஈந்தபின் பால வாயில்
மீனநோக் குடைய செல்வி தரிசனம் விழைந்துற் ருரால். 19

ஈங்கிவர் மீண்டு மெய்தி இமையவர் இறைஞ்சும் தில்லைப்
பாங்கினில் அணிய தாகிப் பகர்கருங் குழியா மூரில்
வேங்கட ரெட்டி யாரும் விழைமனைக் கிழத்தி யாரும்
ஓங்கிய அன்பிற் கேற்ப உறைந்தனர் நீண்டகாலம். 20

முத்தியா லம்மை என்ன மொழியும்அம் மாது தண்ணீர்
வைத்திடு கலயந் தன்னை மாற்றியே தயிலம் வார்க்கப்
புத்தியில் மறதி யாகிப் போயின ரயலூர் ஞான
சித்தரத் தண்ணீர் வார்த்து திருவிளக் கெரித்திட்டாரால்:-

## வேறு

வள்ளற் பெருமான் அருள்நிலையை
மதிக்க வறியாச் சிலர்பொருட்டும்
உள்ளக் கனிவே கூர்ந்தையம்
ஒழியத் தெருட்டி யுறுபிணியால்
எள்ளுற் றிடவே மெலிந்தவர்கள்
இரங்கல் தரியா தருள தனால்
கொள்ளப் பூதி யளித்தளித்த
தெனைத்தென் றீண்டு குறிப்பதுவே: 22

## வேறு

அண்ணலார் முத்து நாரா யணப்பெயர் அடியார்க் குற்ற
கண்களின் ஊறு நீக்கக் கனிந்தவர் விரும்பி ஈய
எண்ணிய செல்வந் தன்னை இனிமையிற் சீநி வாஸ
விண்ணவர்க் குரிய தாக்க விதித்தனர் விழைவி னாலே. 23

உழையுறு மன்ப ரோடும் வெளியிடத் துலவுங் காலை
மழைபட நனைவார் மற்றோர் மாசிலான் வனைந்த தூசின்

இழையுமே நினையக் காணார் இத்திறத் தெண்ணி லாத [ரே
தழையுமற் புதங்கள் எல்லாம் உணர்ந்தனர் தவஞ்செய் தோ

எண்ணிரண் டாண்டிவ் வாறே யிருந்தருள் புரிந்தார் இந்த
பண்ணிய தவஞ்சார் செல்வக் கருங்குழிப் பதியின் கண்ணே
புண்ணியத் தொண்டர்வேண்டும் வேட்கையைப் புறந்த
அண்மையிற் பலவூர் சென்று மீள்குவர் அருளி னாலே. [ராமல்

கூடலூர் அப்பா சாமி செட்டியாய்க் குறிக்கொள் அன்பர்
பாடுறும் கிடங்கில் வாழைப் பாசிலை யிருந்த பாம்பொன்
றீடிலார் உச்சி தீண்டி யிறந்தமை எவரும் கண்டார்
பீடினார் மாண்பை யாரே பேசுதற் குரிய நீரார். 26

செம்பினை இரும்பை ஈய மாமிவை செழும்பொ னாக்கும்
வம்பியல் வாதம் கற்கும் வகையினர்க் கெளிய தாகப்
பைம்பொனாய் மாற்றிக் காட்டி வீசுவர் பற்றி லாமல்
இம்பரின் ஆசை நீத்தார்க் கியல்வதிம் முறைக ளென்றே.

செஞ்சிமால் வரையி லோர்காற் றேவநா யகப்பேர் அன்பர்
மிஞ்சிய பசியால் வாட விழைசுவை யிலட்டும் நீரும்
விஞ்சையில் வருவித் தீந்தார் மெலிவது தவிரு மாறே
நெஞ்சினால் எந்தை யாற்றல் நினையவும் எளிய தாமோ. 28

ஆரண மறியா வெந்தை அறுமுகக் கடவு ளாரே
நேரினில் உணர்த்த யாவும் நிறைமதித் தவத்தி னாரைப்
பாரிலோர் புலவ ராக எண்ணிய பரிசி னோர்கள்
பூரண ஞானி யென்ப துணர்ந்தபின் பொருமி னாரே. 29

ஒள்ளிதா மஞ்ச குப்பம் உறைதரும் இராம கிருஷ்ணப்
பிள்ளையாம் அன்பர் நாளும் பிழைபடார் கூடலூர் எய்தி
வள்ளலார் அமுதச் சொல்லின் மாரியை மடுத்து மீண்டு
நள்ளிரு ளதனில் ஏக அஞ்சுவர் நலிவு றாமல். 30

வழித்துணை யாக ஓராள் வழிக்குமுன் நடந்து சென்றே
இழுக்கற அவர்ஊர் எய்தும் அளவிலும் இலகிப் பின்னர்
விழிக்கற மறைவர் ஞான வித்தகன் அடியர் தம்பால்
ஒழுக்கிய கருணைப் பேற்றை உரைக்கவும் துணிய லாமோ 31

அண்ணலார் பெருமை தேரா தக்ஷய வருஷந் தன்னில்
பெண்ணைமா நதியின் பாங்கர் பிரமஸ மாஜக் கொள்கை
நண்ணினோர் வாதம் பேசித் தம்மத நாட்ட மாட்டா [மல்
தெண்ணினில் வெகுளி யோடும் இரிந்தனர் பொறையி லா:

மாயையின் அதீத மாக வழுத்திய பிரமம் மாயை
ஆயகா ரியம தாகும் மனத்தினு லறிய ஒண்ணு
தேயவே மனத்தால் எண்ணல் எளிதெனிற் புலன்களாலும்
வாய்தரப் படுமா லென்ன வழுத்தினர் மரபி னுலே 33

உருவத்தில் வழிபா டாற்றி உள்ளறி விலகு மாயின்
அருவத்திற் பிரமந் தன்னை ஆன்மஞா னத்தி னுலே
ஒருமித்துள் ளுணர லாகும் உட்புலன் உணர்வ தெல்லாம்
நிருமித்த மனமுங் காணு நியதிய தாகும் என்றார், 34

சீவதே கங்கள் போலச் செழும்பர விளக்கம் வாழும்
தேவதே கங்க ளாகும் உருவங்கள் சிந்தை யாலே
பாவனை வழாது போற்றி வரில்பரப் பிரம சோதி
மேவிநின் றருளு மென்ன விதிமுறை விவரித் தாரால். 35

கூடலூர் அப்பா சாமி செட்டியாம் குறிக்கொ ளன்பர்
வீடகத் தொருகால் வள்ளல் வீற்றிருந் தருளுங் காலை
பீடுறும் வள்ள லார்போற் பெரியவர் ஒருவர் உள்ளே
நீடுரை யாடிப் பின்னர் நீங்கினர் மறைந்திட் டாரால். 36

அடிகளார் தம்பா லெய்தி அதிசயம் வினவுங் காலை
இடையினிற் சார்ந்த சித்தர் இத்துணை அளவிற் காசிக்

கடிநகர் இருப்பா ரென்னக் கழறினர் கனிவி லன்னுர் [றே;
கொடுதரும் இலட்டை யார்க்கும் கொடுத்தனர் சுவைக்குமா

## வேறு

ஆதி ரைக்குச் சிதம்பரம் அண்ணலார்
போதும் ஆற்றினிற் குன்மன் பொருந்தினேன்
வாதை தீரத் துளசி வழங்கியே
ஏத மற்றவன் இன்புறச் செய்தனர். 38

வண்டிப் பாளையம் வாழு மியற்றமிழ்ப்
பண்டை வாணர் இயற்று பநுவலைக்
கண்டு குற்றம் களைந்தளித் தாரவர்
தொண்ட ராகி யணைந்தனர் தூய்மையாய். 39

அதிகை வீரட்டர் அம்பொற் கழல்தொழ
மதியி லெண்ணி மருவிய வள்ளலார்
குதிகொள் கூட்டம் குழுமி நெருக்கலால்
துதிசெய் அன்பர் மனமகிழ் தோய்ந்திட. 40

காட்டி ஞர்தம் திருவுருக் காட்சியை
வேட்ட வேறிடந் தன்னிலு மேவியே
ஏட்டி ஞலும் இயலறி யாதவென்
பாட்டி ஞலும் பகர்வதற் காவதோ. 41

அரவந் தீண்டிய தன்பர் ஒருவரைக்
குரவ ஞமம் குறித்தன ராணையாய்
விரவு வல்விடந் தீர்ந்தது வித்தகன்
திருவு ளந்தனிற் றேர்ந்து கருணையால். 42

ஏற்ற தன்பிர சங்கத் திடையினில்
போற்று மன்பர் வழக்கினிற் போந்தனர்

சாற்றி ஞர்உயிர் ஒன்று தரும்பசி
ஆற்றெ ணுது வருந்துவ தாமெனு. 43

தோன்றும் அன்பரை நோக்கித் துணையிலான்
மூன்று நாள்அள வாக முதிர்பசி
ஏன்றோர் சீவன் இனைவது சென்றவண்
ஆன்ற ஆணை விடுமென் றறைந்தனர். 44

அன்பர் அவ்விடம் சென்றது போலவே
முன்பு கன்றனர் பாம்பு முழையினில்
தன்ப டிச்செல லுற்றது சால்பினை
என்பு கல்வ திருண்மதி மாந்தரே. 45

அரிய ராகம் உணர்ந்தவர் ஐயர்தம்
திருமுன் பாடிடிற் றேசிகன் அன்னவர்
வெருவந் தேங்கிடப் பாடுவர் மேன்மையாய்
சருவ சக்தியும் தன்வயம் சார்தலால். 46

விராவு சூனியந் தால்மெலி வுற்றவோர்
பராவு வைணவப் பற்றின ருய்ந்திட
இராம நாமப் பதிக மியம்பியே
உராவு மன்பில் உதவினர் ஊறற. 47

ஊழின் எய்தி உடற்றும் பலபிணி
வாழி மாதவ வள்ளல்முன் பெய்தலும்
ஏழு மாவுடை யோன்முன் பிரும்பனி
வீழு மாறு விலகும் இயல்பினுல். 48

## வேறு

நாடொறுங் கணக்கி லாத நலிவுறு மனித வெள்ளம்
தேடிவந் தடைந்து தத்தம் தெருமர லகன்று செல்வர்
மாடிருந் தவரு மூன்றி வகுத்திலர் இனைத்தென் றன்னுள்
நீடிய காலந் தாழ்த்து நிகழ்த்தவும் இயல்ப தாமோ. 49

தனக்குமேல் ஒருவ ரில்லாத் தனிமுதல் அருளின் செல்வம்
தனக்குநேர் எவரு மில்லாத் தரத்தினில் வாய்த்த வள்ளல்
மனக்கினி தாக வாரி வழங்கிய மாட்சி தன்னை
நினைக்கவும் எளிய தாமோ நிகழ்த்திய சிலவே அம்மா, 10

---

## உத்தரஞான சிதம்பர மான்மியம்

கசியு முன்னை வினையின் கணக்கினால்
ஒசியு மாந்தர்க் கருள்புரி வள்ளலார்
பசியி னோயும் படர்பவர் தீர்ந்திட
இசையு நல்லறந் தோற்றிட எண்ணினார். 1

கருமச் சார்பிற் கலங்கி வறுமையால்
வருமச் சீவர் மகிழ்ந்துண வேற்கவோர்
தருமச் சாலையைத் தாபனம் செய்திட
இருமைச் சார்பும் இகந்தவர் எண்ணினார்; 2

மன்னும் வெம்பசி யாகு மறலியைப்
பின்னி டச்செயும் பீடு கெழுமிய
அன்ன தானம் அநந்தரம் ஆற்றிட
உன்னி யன்பர்க் குணர்த்தினர் பான்மையால்; 3

அவ்வ றத்தை வளர்த்திட அவ்வவர்
செவ்வி யார்பல் லிடங்களைச் செப்பினார்
எவ்வ மற்றவன் சிந்தைக் கினிதெனக்
கவ்வை தீர்வட லூரினைக் கண்டனர். 4

### வேறு

பரவிய தில்லைக் கூடலை யாற்றூர்
பழமலை யதிகையம் பதிசீர்
விரவிய திருப்பா திரிப்புலி யூரும்
இரும்பைமா காளமும் வியந்தே

உரைதரும் தியாக வல்லிஇங் கிவற்றின்
நடுவணார் உறையுளாய்க் கெடிலம்
தரைபுகழ் பெண்ணை *வெண்ணதி யோடு
சார்மணி முத்தமா நதியும். 5

சூழ்தரப் பொலியும் சூழலாய்த் தில்லை
தூயநாற் கோபுர சிகரம்
வீழ்பவர் காண விளங்குத லானும்
விளம்புறும் பார்வதி புரமாய்

வாழ்திரு நாமம் வழங்கிய வடலூர்
வரைப்பினை வள்ளலார் தருமம்
தாழ்வற வாற்றும் சாலையொன் றமைக்கத்
தக்கதாய்[த்] திருவுளம் துணிந்தார். 6

குடிநலங் கருதி ஆறிலோர் கடமை
கொண்டினி தரசுசெய் திருந்த
முடியுடைக் கோபி லிங்கவெந் தெனவே
மொழிதரும் நிருபனார் முன்னாள்

கடிமதில் அகழி கண்டணி நகராய்க்
காமுற வாழ்ந்தினி திருந்த
தொடர்புறு சின்னம் பலவொடும் விளங்கித்
தோன்றுவ திந்நில வரைப்பே; 7

தன்சிவ நேயம் வெளிப்பட வந்தத்
தரணிபன் தன்குலம் விளங்க
முன்செயுந் தவத்தால் உதித்தவெண் ணகைக்கு
மொழிந்தனன் பார்வதி நாமம்

பின்செயும் நகரம் தனக்குமப் பெயரே
பிறக்கினன் பிறங்கல்மா மகளார்
கொன்செயும் பெயர்கள் ஒருபதும் குறிக்கொள்
ஒருபது பதிகளும் குயிற்றி. 8

* வெண்ணதி-வெள்ளாறு.

வேதியர் அந்தப் புரங்களில் மேவி
விளங்கிட விருப்பொடும் நிறுவி
ஆதர வளித்த சிறப்பினை விளக்கும்
அறிகுறி பலவொடும் திகழ்வ
தோதுறும் இந்தப் பார்வதி புரமாய்
உரைத்திடும் தலத்தையே உளத்திற்
றீதிலான் வடலூர் சிதம்பர மெனவே
திருப்பெயர் புனைந்தனன் தெரிந்தே. 9

ஒப்பிலான் கருணைப் பெருக்கெனச் சுரக்கும்
ஊற்றுகள் பலவுள வாகிக்
கைப்பிலாச் சுவைகொள் கனிவளம் பலவும்
காட்டிய பொழில்புடை தழுவிச்
செப்புறும் விருத்த சயிலமே குனர்கள்
செலவயர் நெறியதாய்ச் சுகஞ்சால்
வைப்பென விளங்கித் தூயகால் வழங்கும்
வடலூறு பதியெனும் வரைப்பே. 10

நீர்வள மதனில் நிகரில தாகி
நிகழ்த்துமெப் பிணிகளும் நிலவாப்
பார்வள முடைய பார்வதி புரத்தின்
வடபுறப் பரப்பதா யிலகும்
சீர்வட ஞான சிதம்பர மிதுதான்
திகழ்தரும் சித்தர்நா யகனுர்
நார்கெழு கருணை நாட்டுதற் குரிய
நற்றவப் பதியுமா யினதே. 11

அன்றியும் நீரக வாசமாம் நகர
வாசமேல் அருவருப் புடையோர்
ஒன்றியே தனிமை யுறுசுக நிலையில்
உறைந்திடும் உறையுளொன் றமைக்க

நின்றநீள் விருப்பும் நிறைவுறும் கால
நியதியும் கூடிய பரிசால்
துன்றுமப் பதிவாழ் அன்பினர் பலருந்
தூயநே யத்தினுற் றெழுதே. 12

எண்பதாம் ஏக்கர் நிலந்தனைத் தான
மாகவே இசைவினில் அளித்தரார்
வண்மையின் மாட்சி வெளிப்பட வந்த
வரைப்பினிற் றென்புறத் திலகப்
பண்புறும் தருமச் சாலையொன் றதனை
யமைத்திடப் பணித்தனர் இறைவன்
நண்பினர் நிலையம் புதுக்கினர் ஞான
நாயகன் திருவுளப் படியே. 13

பூணுலா மார்பிற் றிருவுறும் புனிதன்
பொலிவுறும் சித்திர கூடம்
ஏணுலாம் திருவ ஹீந்திரம் அன்பர்க்
கினியசீ முட்டமா மிவைமுக்
கோணமா யிந்தப் பதியினைச் சூழ்ந்து
குலவிய சிறப்பையும் குறித்துப்
பேணுவார் அறிஞர் வேற்றுமை யுணர்வு
பிறங்கிடா வகையினிற் பெரிதும். 14

உத்தர ஞான சிதம்பரத் தலத்தின்
மான்மிய மெனவுவந் தெடுத்தே
வித்தக ஞானி பதினொரு பாக்கள்
விளம்பினர் திருமுறை யாறில்
செத்தவர் மீட்கும் தெருளருள் வழங்கும்
சிவநிறைந் ததுவெனச் சிறப்பாய்
எய்த்தசின் மதியேன் இயம்பவும் படுமோ
இருந்தவர் உணர்குவா ரினிதே. 15

---

## தருமசாலை பிரதிஷ்டை.

பிரபவ ஆண்டில் இடபமா மதியிற்
பிறங்கிய பதினொன்றும் திகதி
வருகுரு வாரம் தன்னிலே தருமச்
சாலையா மனைபிர வேசம்
புரிதரச் செய்தார் சீவகா ருணிய
ஒழுக்கத்தின் புகல்முதற் பிரிவைப்
பரிவொடும் வரைந்தே வேங்கட சுப்பு
தீக்ஷிதப் பனவனூர் கரத்தால். 1

பூசனை புரிவித் தவரையே படிக்கப்
புகன்றனர் சமரச வேத
மாசிலாப் பாட சாலையும் வகுத்தார்
மருவுபத் தாயிரக் கணக்கில்
போசனம் புரிந்தார் மூன்றுநாள் அளவும்
போந்த பல் லுணவினற் பொருள்கள்
ஆசிலா தாறு மதிகளி னளவும்
ஆர்ந்தவர்க் குதவியா யினவே. 2

அட்டிலிற் புகைதான் அணைந்திடா தென்றும்
அயர்வொடும் அணைபவர்க் கன்னம்
முட்டற வழங்கல் வேண்டுமென் றையன்
மொழிந்தனர் அம்மொழி சிரமேல்
தட்டறத் தாங்கி வேண்டுவ நல்கிச்
சார்ந்தமெய் யடியர்பற் பலரும்
தொட்டனர் தருமப் மணியினை யின்றும்
தொடர்புற நடைபெறு மாறே. 3

வள்ளலார் விருப்பம் உணர்ந்தயற் பதிகள்
வைகுவோர் பலரிதற் குதவும்
உள்ளமோ டடைந்தார் தத்தம தியல்புக்
குகந்தவா நயந்தனர் உவப்பில்
பள்ளவா ரிதிபோல் ஆதுலர் எளியர்
படர்ந்தனர் பசிப்பிணி தவிர்க்க
எள்விழ இடங்காண் பரியதாய் எங்கும்
பரிகல மிலகிய தம்மா. 4

இரவொடு பகலும் நிசியிலும் இவ்வா
றிலகிய தன்னமா தானம்
பெருகிய கருணை வள்ளலார் சித்தர்
முறையினிற் பீடுசார் தரவே
வருரஸ வாதக் குளிகை ஒடதிகள்
வாய்ப்புறச் செய்ததன் பயனும்
எரிபசும் பொன்னைக் குளத்திலும் கிணற்றும்
எறிகுவர் இதையரு கிருந்தே: 5

பற்பல தருணம் குறிப்பினுல் உணர்ந்த
பனவன் அம் பாபுரம் வாழும்
விற்பன முறும்வேம் பய்யரம் முறைகள்
விரகினுற் றூன்செயக் கருதி
பொற்புறு குவையில் புதைத்ததற் குரிய
பொருள்களை யூதினர் புகைந்தே
விற்படர் அவர்தம் விழிகளில் அனலை
வீசிய தக்கணத் தினிலே: 6

விழியொளி மறைய வேதியர் உள்ளம்
குழைந்தனர் மெலிந்தன ராகிக்
கழிபெருங் கருணை வள்ளலார் திருமுன்
குறுகினர் சுழறினுர் வருந்தி

அழிவிலான் முறுவல் புரிந்தவர் விழிகள்
ஆற்றினி லொளிர்ந்திடப் புனலாற்
கழுவினர் கரத்தாற் றுடைத்தனர் கனிந்தே
கண்டனர் இழந்ததன் விழிகள். 7

அருக்கனில் ஒளிர வணங்கினர் போற்றி
யாரிது செயத்தகும் திறலோர்
பெருக்கிய வன்மைச் சித்தரா யிடினும்
பேதமை மாந்தரார் துயரம்
கருக்கொளா தழியக் கருணைவா ரிதியாய்க்
காத்திடும் கடமையே குறியாய்த்
திருக்கர மதனிற் காப்புநாண் அணிந்த
தேசிகர் உளர்கொலோ தெரிக்க: 8

தந்தைதன் திவசத் தந்தணர் கிடையாத்
தடையினுல் வருந்திய வடலூர்
அந்தணர் வயித்தி நாதருக் கிரங்கி
அயற்பதி யுறைந்தவே தியரைச்
சிந்தையுள் நினைத்தே கணத்தினில் அடையச்
செய்தனர் திகைப்புறு மாறே
எந்தையா ரன்னு ளியற்றிய திறங்கள்
அனைத்தையு மியம்புவோ ரெவரே. 9

## வேறு

தாசில் வேலையிற் சார்ந்த தகுதிசார்
ஆசில் வேங்கட சுப்பையர் என்பவர்
தேசி கன்பிர சங்கம் செவிக்கொள
ஆசை யாற்றின மெய்துவர் ஆற்றினில். 10

முன்ன மூதுகொம் பொன்று முழக்குதல்
அன்ன நாள்அதி காரர் அவர்க்குறும்

சின்ன மாக விழைந்தனர் சீவர்பால்
மன்னும் ஆரருள் அற்ற வழக்கினுல். 11

ஐயர் முன்செலும் சக்கிலி யங்கொர்நாள்
வெய்தி னேடவும் நேர்ந்தமை யால்மிக
மெய்வ ருந்திப் பசியில் மெலிந்துடல்
நைத லுற்று நடுங்கின னல்நனி. 12

வள்ள லாரிதை மாதயைக் கோயிலாம்
உள்ளு ணர்ந்தனர் ஓங்குமிவ் வாழ்வுதான்
கொள்வ தெத்தனை நாளெனக் கூறியே
பள்ளன் முன்புணு மாறு பணித்தனர். 13

அவனை யன்றி யணுவசை யாதெனல்
சிவனை யுள்ளுணர் செய்தவர்க் கேயலால்
பவமி யற்றுனர்க் கன்றெனப் பண்பினுல்
உவமை கூறி யுணர்த்தினர் ஓர்பகல். 14

தருமச் சாலையில் உற்றவர் சார்வெயில்
பருவத் தாற்புன லின்றிப் படுதுயர்
ஒருவத் தன்சிர மீதிலோர் செம்புநீர்
சொரிவித் தாருடனேமழை தோன்றியே. 15

போது மென்னும் படிபொழிந் திட்டதால்
ஈது ணர்புதுப் பேட்டையில் எய்துவோர்
போதுமாறு விழைந்தனர் புண்ணியன்
காத லன்பர் கருத்தின் படிசெல. 16

சுவையும் நீர்ச்சுரப் புப்சுவ றுங்கிண
றெவையும் காட்டி யிரந்தனர் வள்ளலார்
நவையி லாறு குடங்கொள் நறும்புனல்
சிவமு றத்தன் சிரத்தினிற் பெய்திட. 17

செப்பி னார்அவ ருமது செய்தனர்
அப்பு மாரி யுடன்பொழிந் தப்பதி
உப்பு நீரொழித் திட்ட ததுமுதல்
கைப்பி லாத சுவைப்புனல் கண்டனர். 18

வள்ள லார்தமை மஞ்சகுப் பத்திடை
உள்ள அன்பர் உடன்கொடு வண்டியில்
குள்ளன் சாவடிப் பாங்கர் குறுகினார்
கள்ளர் வந்து கவிந்தனர் ஆற்றிடை. 19

வண்டி யோட்டிடும் சேவக னும்மனம்
கொண்ட அச்சம் குளித்தவ ராகியே
கண்ட முந்திரித் தோப்பிற் கரந்தனர்
எண்த யங்கும் தலைவரை எய்தியே; 20

அரட்டர் கீழிறங் கும்படி யச்சுற
வெருட்டி னாரிழிந் தார்அவ ரும்விரல்
தெருட்டும் வைரம் செறிந்தொளி ராழியை
இருட்டிற் கண்டு கழற்றென் றியம்பினார்; 21

கண்டர் பேச்சின் கடுமையை நோக்கியே
வண்டி யுள்ளமர்ந் திட்டநம் வள்ளலார்
உண்டு கொல்மிக் கவசரம் என்றுரை
விண்ட னர்மிக மென்மை வழக்கினால்; 22

அவச ரம்கொல் லெனவருள் செய்தலும்
கவர வந்தவர் கைத்தடி யோங்கினர்
அவச முற்றன அன்னவர் தோள்கரம்
அவர்வி ழித்துணை தாமும் இருண்டனர். 23

## வேறு

அன்பனும் இராமச் சந்திர முதலி
யார்முகம் அடிகளார் நோக்கி
இன்பமார் இறைவன் செயலிஃ தெவர்க்கும்
இயம்பொணு தெனவினி துரைத்து
முன்பினில் இடர்கூர் கள்வர்பா லிரங்கி
முறையினிற் பிச்சென மொழிந்தார்
தன்பெருந் தயையால் அன்னவ ரின்னல்
தவிர்ந்தடி வணங்கியே கினரே. 24

முதலியார் பிறருக் குரைத்திடா தொழிந்து
முன்னமே யொளித்த சேவகன்தான்
இதயமார் வியப்பி லியம்பினன் பலர்பால்
இங்கிதை யுணர்ந்ததன் பயனுய்ப்
பதவியார் அதிகா ரத்தினர் பலரும்
அடிக்கடி படர்தர லுற்ருர்
மதியினுல் எவரே வள்ளலார் பெருமை
வழுத்துதற் குரியரா குவரே. 25

## வேறு

வேட்டவல நகரிருக்கும் பண்டாரி
மனைவிதனை வெகுநோய் செய்த
சேட்டவல முறுபிரம ரக்ஷஸுதான்
வள்ளலவண் செறியா முன்னம்
கோட்டவல மின்றியெதிர் கொண்டிறைஞ்சி
யகல்கின்றேன் எனவே கூறி
ஓட்டமெடுத் ததுமடந்தை இயற்கையுணர்
வுற்றனரா லுறுநோ யின்றி. 26

## வேறு

அப்பா சாமித் துரையென்றே
யறையும் அனையார் அதுதொடங்கித்
துப்பார் சைவ போஜனராய்த்
தூய்மை யடைந்தார் வேட்டவல
வைப்பார் அரவு தேள்முதலாய்
வலிசெய் விடமார் உயிரையெலாம்
வெப்பார் பிடாரன் தனைஏவி
வெளியே கவர்ந்து விடச்செய்தார். 27

இலகும் கல்பட் டையாவென்
றிசைக்கும் யோகி குருபரனார்
வலிய அணைந்தாட் கொண்டருள
வருதல் வேண்டு மெனும்விருப்பம்
நிலவி நறுங்குன் றப்பதியில்
இருந்தார் நிமல னதைஅறிந்தே
அலகி லருளால் அடைந்தவர்க்கும்
தீட்சை யளித்தங் கவர்தமையும். 28

வடலூர்ச் சாலை கொண்டணைந்து
வனைந்தோர் சிறிய குடிலதனில்
உடனு யமர உரைத்தனரால்
ஒழியாக் கருணை யாலவரைக்
கடனும் ஞான வகைகழறும்
காலத் தருகி லுறவழைப்பார்
திடமார் யோகி தவப்பெருமை
தேர்தல் பிறருக் கெளிதேயோ. 29

ஒருநாள் தருமச் சாலையிலே
உணவுப் பொருள்கள் சிறிதாக
வரும்ஆ துலர்கள் நூற்றுவருக்
கதிக மாய வகைநோக்கிப்

பெருமா னிடத்தில் உரைத்தனரால்
பெரியார் எழுந்து திருக்கரத்தால்
பரிவாற் படைக்க முனம்சமைத்த
பகுதி குறையா திருந்ததுவே. 30

## வேறு

ஆடூரில் நான்மறையோ டாகமத்தின்
அரும்பொருளும் அடைவே தேர்ந்து
பீடாரும் சிவஞானப் பெருக்கருந்தி
யோகநிலைப் பெரும்பே றூர்ந்து
சேடுரும் புகழ்சபா பதிசிவா
சாரியராய்த் திகழ்வோன் தன்னை
ஏடுரும் நிருபமதால் எய்திடுமா
செய்தருகில் இருத்தி னரே. 31

மந்திரங்கள் தமக்கெல்லாம் தனித்தலைமை
வாய்ந்ததுவாய் வயங்கா நின்ற
முந்தியகா யத்திரியின் முதிர்பொருளை
உளம்தெருட்டி முதங்கூர் வித்தே
அந்தரங்க முணர்பவராய் அருகிருக்கப்
பணித்தனரால் அனையோர் முன்னுள்
தந்தவ முடைமையினுற் சான்றவரும்
உரைவழியே சார்ந்திட் டாரால். 32

## வேறு

திருமுதுகுன் றப்பதியி லோர் அன்பர்
திருவருள் வள்ளலார் தமக்குத்
திருவமு தூட்டும் காதல்கூர்ந் திருந்தார்
சிந்தையை உணர்ந்தொரு தினத்தில்

வரவெதிர் பாரா நிலையினி லெய்தி
வாய்ந்திடும் இன்னமு தருந்திப்
பெருமகிழ் கூரச் செய்தனர் முழுதும்
உணர்ந்தவர் பெருமையீ தன்றே. 33

உச்சியிற் றருமச் சாலையி லையன்
ஓங்கிய நிட்டை கூடிடுங்கால்
நச்சியே மருங்கில் உறைபவர் நோக்கில்
ஞாயிறு மண்டலத் தளவோர்
வச்சிர வொளியார் தம்பம்ஊடுருவி
வள்ளலார் சிரத்தெழுந் துறல்போல்
நிச்சயக் காட்சி வெளிப்படு மென்ன
நிகழ்த்தினர் உடனிருந் தவரே. 34

இரும்பின மாதி பொன்செய வல்ல
இயல்புறும் வகார முப்பூவை
விரும்பினர் அதனை யுட்கொடு பருகி
வீழ்ந்திடா வச்சிர தேகம்
அரும்பிடக் குருக்கள் சாமியும் அருகே
அமர்மழைச் சாமியும் விழைந்தார்
தரும்பிர காசர் இவருடல் எரிக்கும்
தரத்தினை உணர்த்தினர் தனித்தே, 35

தனிமையில் உலவச் சார்பொழு தொருநாள்
சார்ந்துடன் தொடர்பவர் தம்மை
இனிவரா தீரென் றியம்பியும் சிலர்பின்
பேசினர் ஆணையை இகந்தே
முனிவர்தாம் நெடுந்தூ ரத்தினில் உருவம்
காட்டினர் முடுகியே தொடர்ந்தார்
நனிதளர்ந் தோடி இளைத்தனர் ஞான
நாயகன் தனைஅடை கிலராய். 36

## வேறு

சுத்த தேகம் படைத்தவர் சூழ்கரம்
வைத்து லோகம் உருகும் வகையினை
உய்த்து ணர்ந்திட எண்ணியுற் றூர்ஒரு
சித்தர் ஓர்பகல் வள்ளல் திருமுனம். 37

கம்ப ளத்தில் வனைந்திடும் காலுறை
அன்பி னூர்கள் விரும்ப அணிகுவார்
நம்பும் ஞானிகள் நற்பத ரட்சையில்
வெம்பி லிங்கம் உருகும் விதத்தினை. 38

குருக்கள் காண விரும்பிக் குருபரன்
தரிக்கும் பாத வுறையினுட் டங்கிட
செருக்கி லிங்கம் செறித்தனர் நாற்பலம்.
உருக்கும் நீரிற் கரைந்த துணர்ந்தனர். 39

கோடை வெப்பத்தி னூற்சுரம் கூடியே
வாடி னூர்அறச் சாலையில் வைகினோர்
ஈடில் எந்தை அனைத்தையும் ஏற்றனர்
கூடி னூர்சுகம் யாரும் கொதிப்பற. 40

சாற்று வார்பிர சங்கம் சதிர்உற
வேற்றி டத்தும் விழைவுறும் அன்பர்முன்
தோற்று வாரவர் துன்பம் தொலைந்திடப்
போற்று வாருள ரோபுகழ் நாவினுல். 41

மாந்தர் தம்மை மருட்டுவ தாற்சிறை
சார்ந்தி டல்வரு மென்று தருக்கினுல்
சார்ந்த *வானூர் தனில்அமுல் செய்திடும்
ஓர்ந்தி டாவதி காரி உரைத்தனர். 42

---

* வானூர் - புதுவைக்கருகேயுள்ள ஊர்.

நாள்க ளோர்பதி னைந்தில் நவின்றவர்
கோள்வி னைந்து கொடுஞ்சிறை புக்கனர்
மூள்ப வத்தொடர் பற்ற முனிவரர்
நீள்வ லத்தினை நேர்குவ ரோபிறர். 43

## வேறு

திருமுது குன்றப் பதியினில் நியாய
வாதமாற் றிடுந்தொழில் சிறந்தே
மருவிய வேங்க டேசரா மறையோர்
மாதொடும் வள்ளலார் மொழித்தேன்
பருகிட வருவர் பரிதிநாள் தோறும்
படர்வுறும் வழியினிற் காட்டில்
இருபெருந் தீவர்த் திகள்இவர் முன்னம்
ஏகிடும் ஏற்பவர் இன்றி. 44

இப்பெரு வியப்பால் அடிகளார் மாண்புக்
கீடுபட் டவனுறுந் தொழிலும்
கைப்புறும் நிலைவந் தன்பினால் வடலூர்
வசித்திடக் காதலித் தடைந்தார்
விப்பிர மரபார் வேங்கடே சய்யர்
வீடுறு மளவிலும் வினைதீர்
அப்பன தருளுக் காட்படா தவரும்
அறிஞரில் உளர்கொலோ வம்மா. 45

விதிக்கலை யுணர்ந்த வேதியர் நால்வர்
சாமவே தத்தினில் விமலன்
பதிக்குமெய் யறிவைச் சோதனை புரியும்
பான்மையோ டெய்தினர் அனையார்
மதிக்குளே கருதி வந்திடும் பகுதி
தன்னையே வள்ளலார் அதுகால்
துதிக்குரித் தாகப் பிரசங்கம் புரியக்
கண்டனர் தொழுதுபோற் றினரால். 46

சென்னைமாண் புதுவை சிதம்பரம் கூட
ஆரோடு செறிகருங் குழியாய்
மன்னிய பதிகள் தன்னிலே யடிகள்
வரைந்திடும் பாசுரத் தொகுதி
தன்னிலே பிழைகள் தழுவிடப் பல்லோர்
தனித்தனி அச்சிடல் தவிர்ந்து
நன்னிலை முறையின் வகுத்தளித் திடவே
நயந்தனர் அன்பர்பற் பலரே. 47

முற்பட இசையா திருந்தனர் எனினும்
மொழிபவர் வற்புறுத் தலினல்
பிற்படத் தொழுவூர் புலவரால் நான்கு
பிரிவெனப் பிறங்கிட வகுத்தே
அற்பினில் உதவப் பணித்தனர் அவற்றை
அன்பினோர் திருமுறை நான்காய்
பொற்புறு மச்சிற் பொறித்தினி தளித்தார்
ஏவரும் புலங்கொள வினிதே. 48

தணிகையில் ஒளிரும் சரவண பவனும்
சற்குரு நாதனர் தண்டை
அணிகழற் கிசைத்த பாவெலாம் ஐந்தாம்
திருமுறை யாகவே யமைக்க
இணையிலான் குறிக்கத் தலைமைமா ணவரா
யிருந்தவர் தொகுத்தனர் பிறகு
பணியினில் ஆறும் திருமுறை யாகப்
பகுத்தனர் பிரிவெலாம் பரிவாய். 49

சுத்தசன் மார்க்கக் குறிப்பநு பவந்தான்
சூழ்ந்துளே துலங்கிடு மளவும்
அத்திரு முறையை அச்சிட் மறுத்தார்
ஆரியன் கட்டளை வழாமல்

உத்தமத் தலைமை மாணவ ராக
ஒழுகிய இருமொழிப் புலவர்
வைத்தனர் தனியாய்ப் பின்னரே அச்சில்
வயக்கினர் ஆணையின் வழியே. 50

அன்பர்தங் குழுவில் ஒருவரா யமர்ந்த
நாயனு ரெட்டியார் அகத்தே
பொன்புரி விக்கும் இச்சைதான் கரவிற்
பூத்தமை யுணர்ந்துபூ ரணர்தான்
மன்பரி வதனுல் மணலினைத் தனது
மலர்க்கரத் தெடுத்ததிற் றண்ணீர்
இன்புற வூற்றிப் பொற்றுக ளாக
இருப்பது காட்டினர் இசைந்தே. 51

இச்சைதீர் ஞானிக் கிரும்பல மலமும்
எழில்ஒளித் தங்கமாம் என்னும்
நிச்சய நிலையை உணர்த்தினர் அனையார்
நீங்கினர் தனதறி யாமை
இச்சகத் திணைதீர் சித்தர் நாயகனர்
இயற்றிய அற்புத மனைத்தும்
கொச்சையா மறிவாற் குறிப்பது தகுமோ
கூறிய கூறலே யன்றே. 52

## வேறு

தேன லர்ப்பொழிற் றில்லையி லாண்டுதோ
ருனி மஞ்சனம் ஆதிரைக் காட்சியும்
மான வன்துணை கொண்டு மருவுவார்
ஆன வன்பர் பலர்அடை வாகவே. 53

தடவை யொன்றினிற் சார்ந்தமெய் யன்பினேர்
கடைசி நாளள வும்கரு ணைக்கிறை

உடனெழா மையி னுற்பிரிந் தூக்கமாய்
நடன நாயகன் காட்சியை நாடியே. 54

ஒருவர் மற்றவ ராக வொருவினுர்
பொருவி லாத புனிதர்பின் சாலேயில்
மருவி நின்றவர் கண்டு மகிழ்ந்திட
திரைவ குத்துத் தெரிசனம் காட்டினுர். 55

தில்லே மன்றிற் றிகழ்தரும் கூத்தனுர்
அல்லல் தீர்க்கும் தெரிசன வற்புதம்
நல்ல சாலேயிற் கண்டனர் நாயகற்
புல்லி நின்றிடும் புண்ணிய முற்றுளோர். 56

உச்சிப் போதினில் ஓர்பகல் அண்ணலார்
இச்சை யால்வெளி ஏகினர் எய்திலார்
நச்சும் அன்பர் ஒருவர்பின் நாடினுர்
அச்சம் எய்திட ஐயன் அவயவம். 57

வேறு வேறு பகுதிக ளாய்வெளி
பாறி நின்றமை கண்டு பதைத்தனர்
தேறி டாதுவிழுந்தனர் சீரியோன்
ஆறு மாறுடன் காட்சி அளித்தினி. 58

இவ்வி தம்தொடர்ந் தெய்துதல் தீர்திர்என்
றெவ்வந் தீர இனிதறி வித்தனர்
கௌவை நீங்கினர் அன்பர் கருதரும்
தெய்வ சித்தர் செயலவர் தேர்வரே. 59

சென்னே யம்பதி யிற்செறி ஏகுவின்
மன்னு மார்க்க வறியவர்க் கன்பினுல்
இன்னல் தீர்தர வெள்ளி யியற்றிடும்
அன்ன மார்க்க மறிய உணர்த்தினுர். 60

முன்செய் புண்ணியத் தாலிம் முறையினைப்
பின்செய் தின்மைப் பிணிதவிர்ந் திட்டவன்
பொன்செய் வண்ணமும் ஓர்ந்திடப் புந்தியில்
உன்னி யேவட லூரினை யுற்றனன். 61

உள்ளத் திச்சை யுரைசெய வஞ்சியே
வள்ளற் கோமக னார்முன் மருவினன்
கள்ளக் காதலை உள்ளம் கருதினார்
மெள்ள அன்னவன் கையினில் மேவிய; 62

தடியை வாங்கி யதன்தலை கட்டிய
நெடிய வெள்ளியின் பூணினை நீக்கியே
கடிகொள் தாமரைக் கைத்தலத் துய்த்தபின்
அடையும் பொன்னுருக் காட்டி யருகினில்; 63

உற்ற கேணியில் வீசினர் நும்முளம்
பெற்ற சித்தி பெருகும் இனிஎனச்
சொற்றி ருந்தனர் சூழ்ந்தவன் உண்மையாய்
மற்று ளத்தில் மதித்தகல் வுற்றனன்; 64

ஆசை மிக்க அவன்பதி ஆர்ந்தபின்
ஈசன் முன்னர் இயம்பிய சித்தியும்
மோச மாக முடிந்தமை கண்டனன்
நாச முற்றிடுந் தீவினை நண்ணலால். 65

சூரி யன்உப வாசம் தொழிற்படும்
ஆரியர்இரு வேதியர் அண்ணலார்
சீருணர்ந்து மருவினர் சிந்தையிற்
கோரி வந்திடும் ஐயம் குலைந்திட. 66

வெள்ளி நாணயந் தன்னை விமலர்கை
உள்ளி ருத்தி விரைவில் உருகுறும்

விள்ள ரும்நிலை காட்ட வியப்பினுல்
வள்ள லேக்குரு வாக வணங்கினுர். 67

## வேறு

பஞ்சமர் தலைவ னுகப் பகர்அமா வாசை யென்பான்
துஞ்சுமாட் டிறைச்சி யுண்ணுத் தூயனுய்ப் புதைக்கு மாறு
நெஞ்சுற உணர்த்தி னுரால் நேர்ந்தன னவனும் அவ்வா
றெஞ்சுதன் வறுமை நீங்கி இருந்தனன் செல்வ மோங்கி 68

சண்முகம் பிள்ளை என்னச் சாற்றிடும் பிள்ளை சாலை [கேட்டு
உண்பதப் பொருள்கள் அஃகும் நிலைமையை உணர்த்தக்
எண்பதித் திருந்து சில்போ தெண்ணிய பொருள்கள் நாளை
நண்ணுறு மெனவே வாய்மை நவின்றனர் குறிப்பி னுலே, 69

சொற்பனம் நிகழ்ந்த வண்ணம் திருத்துறை யூரிற் றேய்ந்த
அற்புடை யொருவர் மூன்று வண்டிகொள் அரிசி யோடும்
மற்றைய பொருள்க ளோடு மருவினர் மறுநாட் காலை
தற்பர னருளே தானும் தரத்தினர்க் கரிய துண்டோ. 70

## வேறு

சன்மார்க்கப் பாட சாலை சாலையில் நிறுவ எண்ணித்
தன்மார்க்கம் தழுவி நிற்கும் தலைமைமா ணவரை நோக்கிப்
பன்மார்க்கத் தவரும் போற்றும் பனுவலாம் குறளைப்பாடம்
முன்மார்க்க மாகக் கூற மொழிந்தனர் கருணை யாலே. 71

மூன்றதி காரந் தானும் முடிந்தில மாத மூன்றில்
ஏன்றவர் வள்ள லார்பால் இயம்பினர் வருந்தி ஐயன்
ஆன்றமா ணவரைக் கூவி வினவினர் அயர்த்த தன்மை
சான்றவர் பாட சாலை தவிர்கெனச் சாற் றினுரால். 72

———

## சத்தியஞான சபைப் பிரதிஷ்டை

உத்தர ஞான சிதம்பர மென்றோர்
நித்திய நாமம் நிகழ்த்திட நின்ற
வித்தக வின்பம் விளக்கும் வரைப்பில்
சத்திய ஞான சபைப்பெய ராலே. 1

எண்கோ ணத்தில் இலங்கிடு கமலத்
தண்போ தொத்த சமைப்பினி லந்த
விண்பா லோங்கும் வியன் சபை யொன்றை
மண்பாற் காண மதித்தமை யாலே. 2

இமைப்பில ராயிமை யோரும் வியப்ப
சமைப்புறும் ஞான சபைக்கியல் பாகும்
அமைப்பும் வரைந்தருள் செய்தன ரன்பர்
தமக்குள மின்பு தழைத்திடு மாறே. 3

ஓதிய சாலையி னுட்பிர வேசம்
மேதக வாற்றிய வித்தக நாளாம்
தேதியில் இச்சபை செய்யு முகூர்த்தம்
மாதயை வள்ளல் வகுத்தனர் முன்பே. 4

### வேறு

கூறும் பிரஜோற் பத்தியெனக்
குறிக்கு மாண்டில் ஆனிதொடர்ந்
தேறு மகர மதிக்குள்ளா
யெழுப்பும் ஞான சபைவேலை
வீறு பெறவே வள்ளலருள்
விளக்கம் துணையா யன்பர்முடித்
தீறில் தனிமெய்ப் பெருங்கருணை
யேய்ந்தார் புகழும் வாய்ந்தாரே. 5

ஞான சபையின் கட்டிடத்து
நலமார் வேலை தொடங்கியதும்
வானிற் புவியிற் றனக்கிணைதீர்
வள்ளற் பெருமான் தென்திசையில்
ஆன விரண்டு மயிலளவில்
அமைந்த மேட்டுக் குப்பமெனும்
தான முறுமோர் தழைக்குடிலில்
சார்ந்து தனிமை யுறவிழைந்தார். 6

திருவார் சித்தி விளாகமெனச்
செப்புங் குடிலில் ஐந்தடிகள்
விரிவார் நிலைக்கண் ணுடியினை
விமலன் ஒருமண் டலம்பூசித்
தருளார் ஒளியாம் தீபமொடும்
அளித்தார் சபையில் அமைத்திடவே
தெருளார்ந்திடவே அடைந்தருகிற்
றெரிசிப் போர்கள் அனைவோரும். 7

தன்பா லன்பு தழுவுசபா
பதிப்பேர்ச் சைவ மறையவர்க்கே
அன்பாற் பொதுவும் சிறப்புமென
அமைந்த பூஜை முறைகளெலாம்
முன்பா யுணர்த்தி நிகழ்த்திடுமா
றியம்பி முதலாண் டினிற்பூசத்
தின்பார் விழவை யெல்லோரும்
தரிசித் திடுமா றியற்றினரே. 8

அருட்சோ தியின தறிகுறியாய்
அமைந்த வாடிக் கப்புறத்தே
தெருட்சார் தீபம் திகழ்தரலால்
தெரிசிப் பவர்கள் முனமறைக்கும்

மருட்சார் ஏழு திரைகளெலாம்
மரபின் விலக்கல் வேண்டுமெனும்
பொருட்சார் புணர வகுத்தனரால்
புலவர் பெருமான் புதுவகையில்: 9

கரிய திரைதான் மாமாயை
கவின்ற நீலத் திரையுருவம்
பெரிய மாயா சக்தி யதன்
பின்பார் பச்சைத் திரைகிரியை
உரிய சிகப்பு நிறம்பரையாம்
ஒளிர்பொன் இச்சை உயர்வெண்மை
அரிய ஞானம் கலப்புநிறத்
திரைதான் ஆதி சக்தியதாம். 10

அழியா வான்ம விளக்கமதை
அரணாய் மறைக்கும் எழுவகையாம்
ஒழியா வன்மைச் சக்திகளும்
ஒவ்வொன் றாக நீங்கிடுமேல்
எழுமா சோதி தெரிச னந்தான்
எளிதிற் பெறலா மெனும்குறிப்பைத்
தொழுவோ ருணர வகுத்தனரால்
தூய ஞான சபையிடையே. 11

மாதந் தோறும் வரும்பூச
மருவும் சோதி தெரிசனையால்
ஏதம் சாரும் பிணிதவிர்வார்
இணையி லாத மகரமதி
போதும் பூசதெரி சனந்தான்
புலனில் விரும்பும் பேறனைத்தும்
ஈதந் தழியா முத்தியையும்
எய்த வளிக்கு மெனவகுத்தார். 12

மகர மதியில் வரும்பூசந்
தனிலே வகுத்த ஏழ்திரைகள்
அகல நீக்கி அறுகாலம்
அருளார் சோதிக் காட்சியினை
நிகரி லடியார் கண்டுவப்பார்
நிலவு மாதப் பூசமெலாம்
புகலு மாறு திரைகளையே
நீக்கு முறைதான் பொருந்தியதால்: 13

அண்ட பிண்டத் துள்ளமைந்த
அமைப்பை யுலகோர் அறிவதனுற்
கண்டு தனிமைப் பேரின்பக்}
காட்சி யெளிதிற் பெறும்குறிப்பே
கொண்ட ஞான சபைமாண்பைக்
குறித்த லெளிதோ அறிஞருக்கும்
உண்ட ஞான தேசிகனுர்
குறிப்பை யெவரே புணர்ந்திடுவார். 14

வேறு

முந்திய பிண்ட சக்தி முழுதருள் மூர்த்தி யாகும்
சந்திரன் தனது வீட்டிற் சார்முழுக் கலைக ளோடும்
வந்துறும் பூசந் தன்னில் வளரொளிக் காட்சி காண்போர்
அந்தமில் தேக சித்தி யடைகுதல் உறுதி யாமே. 15

ஆதவன் வடபாற் சாரும் அயனமா மகர மாதம்
சீதமா மதிசேர் பூசம் சிறப்பிலும் சிறப்ப தாகும்
ஓதுமோங் கார தேகம் உவமையில் ஞான தேகம்
போதுறச் செய்யு மென்றும் புகன்றனர் விரகி ஞரே: 16

சக்திகள் ஏவல் கேட்பத் தனிப்பெருங் கருணை யாட்சி
மெய்த்தவன் பலருங் காண விளக்கிய குறிப்பி யாவும்
அத்தலை குழுமி நின்றார் அயர்த்தில ராகித் தீட்டி
வைத்திலர் உலகோர் தேறும் வழக்கினில் வழுவி லாமல் 17

## சித்தி விளாகத் திருமாளிகைச் செறிவு

சித்தி விளாகமாய்ச் செப்ப வந்திடும்
அத்தலை யிருக்கையே ஐயன வாசமாய்
உய்த்ததன் குறிப்பின் தொருமைக் கேற்றிட
நித்தலு மார்ந்திடு நிலைய ராயினர். 1

### வேறு

தந்த குறிப்பின் படிசபையை
யமைத்த வடியார் அலங்காரப்
பந்தல் முகப்பில் வனைந்திடவும்
விழைந்தார் பரிவின் அப்பணிக்கு
வந்த பிறவூர் வினைஞர்பலர்
வதிந்தார் அதனில் வழுவுறுதம்
சிந்தை யியல்பில் உபயோகித்
திருந்தார் சிறிது மதியாராய். 2

மேட்டுக் குப்ப முறும்சித்தி
விளாகத் தயர்ந்த வித்தகனார்
ஊட்டும் பிரசங் கத்திடையே
ஒருநாள் மாலை வெளிப்போந்து
நாட்டும் போதப் பந்தல்இதில்
இயற்றும் நவைகள் ஆண்டவனார்
பாட்டில் உள்ளம் இசைந்திலரால்
படரும் சோதி காண்மினென. 3

திருவாய் மலர்ந்த மறுகணத்திற்
செறிந்த வான மிசையெழுந்து
கருமா முகிலின் கணம்குமுறி
மின்ன லிடியும் கலந்தொளிரப்
பெருமா மழையைப் பெருக்கியதால்
பிறங்கு முகப்புப் பந்தல்மிசை
ஒருபே ரிடிவீழ்ந் தனல்கதுவி
யெரிந்த ததனை யுடனுறைந்தோர்; 4

மேவி யணைக்க விழைந்துமதைத்
தடுத்தார் விமலன் வியன் சபைக்கும்
தாவு மனலென் றன்பருளம்
தளர்ந்தார் அவ்வா றணுகாதென்
றோவி லருளால் உரைசெய்தார்
உரைத் தபடியே யூறிலதாய்
தேவஞான சபையிருந்த
தொருநா ளைந்து தினமெரிந்தும் 5

## வேறு

வள்ளலார் மேட்டுக் குப்ப வரைப்பினிற் றினமு மாற்றும்
தெள்ளிய மொழியின் மாரி செவிமடுத் திடுவோர் தம்மோ
டொள்ளிய நொண்டியாட்டுக்குட்டியொன்றொழியாதெய்தி
எள்ளறு மிடது காதைத் தாழ்த்தியே யிமைத்திடாமல்; 6

பிரசங்கம் கேட்கும் பின்னர் அங்குறும் பெரியோ ரோடும்
வரசங்க மமர்வி ளாக வரைப்பினை வலஞ்செய் தேகும்
பரசுமெய் யறிவு வாய்ப்பிற் பருவுட லெதுபெற்றாலும்
உரைசெயு மிழிவுண் டாமோ உயர்குறள் மொழிந்தவாறே. 7

வள்ளலார்க் கமைவ தாக வருமுண வினையே யந்த
ஒள்ளிய நொண்டி யாடும் ஒருமுட வாத்தி யாரும்

கொள்ளுமா றுதவ ஆணை கொடுந்தனர் இனைய பேற்றை
அன்ளமுன் பாற்றி நின்ற அருந்தவம் யாவதேயோ. 8

பல்லவ தானம் செய்யும் வயிணவப் பனவர் என்னும்
வல்லவர் ஒருவர் எய்தி வள்ளலார் பெருமை தேறிப்
புல்லிய வன்ப ராகிப் பொருந்தினர் புவியில் யாரே
சொல்லெதிர் முடிதா ழாமல் இருந்தவர் துணியுங் காலே. 9

கருங்குழி யார்ந்த கல்லாங் குளக்கரை மீதி லோர்கால்
பெருந்தகை யுலவுங் காலை பேதையா மொருவ னெய்தி
ஒருங்குப தேசம்செய்ய வேண்டினன் உடனே வள்ளல் [ன்]
மருங்கொரு மயிலிற் சுப்பால் வயங்குருத்தோன்றக்கண்டா

## வேறு

காற்றில் நீரிற் கனற்புவி யாதியால்
கூற்றி னுற்பிணி யாற்கொலை யாயுத
ஊற்றத் தாலிடர் எய்தவொண் ணுததாய்
ஏற்ற சுத்த வுடம்பினை எய்திட: 11

எரிகொள் வல்அயச் சட்டி யிருபுறம்
பருவ மற்றத னுப்பண் வதிந்துசெய்
பிரம தண்டிகா யோக மெனும்பெயர்
அரிய யோகம் அடிக்கடி ஆற்றுவார். 12

குருக்கள் சாமி குறுகினர் ஓர்தினம்
எரிக்கும் சட்டி யிடறினர் வீழ்கனல்
விரற்கண் வெம்மை விளைத்தது வித்தகன்
திருக்கொள் மேனியைச் செய்தில தொன்றுமே. 13

பாடை ஐந்து பயின்று புதுவையில்
பீடு பெற்ற பிஞகபா ணிப்பெயர்
சூடினோன் அறச் சாலையிற் சூழ்ந்துளோர்
மாடு நிந்தை வழங்கினன் அற்பமாய். 14

வீணர்கூடி வெறும்பொழு தேகழித்
தூண ருந்தி யுறங்குனர் என்றிகழ்ந்
தாண வத்தொடுங் காண வடைந்தனர்
மாணா மாதவன் உள்ள மதித்திதை. 15

இத்த லைக்கண் இவர்வரு முன்னரே
புத்தி கற்பிக்கப் போதுகின் றார்ஒரு
வித்த னென்ன விளம்பினர் மேவிய
சித்த மாசு செறிந்த முதலியும். 16

வள்ள லாரெதிர் எய்தி வழக்குரை
விள்ள நாழிகை யொன்று விமலர்பின்
கொள்ளும் நான்கு வயது குறிக்குமோர்
பிள்ளை தன்னைப் பிடித்து நிறுத்தியே. 17

எந்தப் பாஷையில் எவ்விட யத்தையும்
இந்தப் பிள்ளையைக் கேளும் இசைவுறத்
தந்தி டும்விடை யென்றனர் சார்ந்தவர்
மூந்த மூர்ச்சையுற் றார்மொழி யூமையாய்; 18

வாயெ ழாமல் வருந்தி அரைமணி
நாயனார் அருள் நாடி மனத்தினால்
நோயு ழந்தனர் வள்ளல் நுவன்றனர்
வாயிற் பிச்சென் றியம்பும் வழக்குரை: 19

ஊமை நீங்கி வணங்கி யுணர்வொடும்
தாம கன்றனர் பின்னர் இச் சாலையில்
ஏம மாக வுறைபவர் எண்ணிய
நாம சோதிடம் நாடிடு மந்திரம். 20

ஆயுள் வேதம் அருப்பெறல் மூலிகை
தூய நற்குளி கைத்திறம் சொல்லொணா

பாய வேதத்தின் அந்தம் பலபட
நேய மோடும் நினைவுற லோதினர். 21

மந்தி ரக்கலை தேர்ந்தவர் வள்ளல்பால்
வந்த நால்வர் வழியினிற் காளிதான்
முந்த அச்சுறச் செய்தல் மொழிந் தனர்
எந்தை யங்கவர் மீதி லிரங்கியே. 22

நம்மிடத்து நணுகுறும் உண்மையைச்
செம்மை யிற்றெரி வித்திடும் சென்றென
அம்ம திப்படி சென்றறைந் திட்டனர்
வெம்மை யுற்றவக் காளி வெருக்கொள. 23

காட்டுந் தோற்றம் சுருக்கிக் கழல்பணிந்
தோட்டந் தந்த துவந்தனர் சென்றனர்
வீட்டும் வல்லர வத்தின் விடத்தினால்
வாட்ட முற்றவர் இல்லை மருவினேர். 24

கரவிற் பொன்செயக் கற்ற வொருவரைத்
தருமிச் செய்கை தகாதென்று கூறியும்
புரிய லாயினர் பின்பவை பொன்படாக்
கரியதாகிக் கழிந்தமை கண்டனர். 25

கொற்ற வள்ள லிடத்திற் குளிகைகள்
பெற்றி டிற்பல பேறுறு மென்றுளம்
பற்று மாசை பரித்தவர் தங்களை
உற்ற வன்பின ழைத்தவர் உன்னிய. 26

மிளகு மான மிகச்சிறி தாகிய
குளிகை யைக்கரங் கொள்ளக் குறித்தனர்
அளியி னுலெடுத் தாற்றல ராகியே
தெளிவு பெற்றனர் சிந்தை நசையற. 27

## வேறு

பொருவியா கரணம் தருக்கமுணர்
புலவர் இருவர் இவண்போந்து
திருவா சகத்தின் முதல்அகவற்
குரைதான் தெரிக்க வேண்டுமெனக்
கரைவோம் கேட்கும் திறமுளதோ
எனவே கருணை யொடும்வினவி
மருவா நின்ற முதலெழுத்தாம்
நகார வொலியின் வரவதனை. 28

விளக்கு முகத்தால் அதற்குரித்தாய்
விரியு மெண்ணெண் இலக்கணமும்
அளக்கு மிரண்டு மணிநேரம்
அறைந்தார் தலைமை மாணவரும்
உளக்கண் உணர மாட்டாமல்
திகைத்தார் எவர் உணர்திறத்தார்
களக்க மறுநற் கலைவடிவே
கருத்தை விரிக்கப் புகுதுமெனில். 29

தில்லைப் பதியில் வேற்கரனார்
திகழும் பாண்டி நாயகப்பேர்
சொல்லும் உயர்ஆ லயம்புதுக்கத்
தொடர்ந்த பணிமேற் கொண்டடைவோர்
ஒல்லு முழைப்பிற் கேற்றபடி
யுதவும் பொருளா யிலகிடவே
வல்ல சித்தி வலமதனால்
வழங்கிப் பூதி அளித்தனரால்; 30

## வேறு

ஆற்றிய வுழைப்பிற் கேற்கு மளவின தாகப் பூதி
ஏற்றவூ தியமாய் மாற வினிதிலப் பணிதான் முற்றி

சாற்றிய வபிடே - கஞ்செய் சடங்கினில் வள்ள லாரைப்
போற்றிநல் வரவு வேண்டப் புகுந்தனர் இவரும் ஆங்கே. 3

அன்பரோ டுண்ணுங் காலே யடிகளார் தம்பா லெய்தி
முன்பொரு பிடியா மன்னம் முதமுற வீயு மாறு
தன்பரி வதனல் வேண்டிப் பெற்றகம் தழைத்தார் பாம்பின்
பென்பதம் பிறராற் காணப் பெறுவது மெளிய தாமோ. 32

புன்றெழில் வலேஞர் தாமும் திருந்தினர் புனிதன் போதம்
நன்புலத் தழுந்தி யென்றல் இயற்கையில் நலமே நாடும்
அன்பர்கள் தூய ராதல் அதிசய முடைய தாமோ
என்பொடு மனமும் அன்பில் இசைந்தனர் அறிஞர் தாமே.

உலகெலா மெனவே முன்ன மோதிய மொழியைப் பற்றி
இலகிரண் டாயி ரத்தின் இணையிரு நூற்றி ரண்டாம்
உலகுகள் விளக்கி வைத்த வுண்மையே அனைத்து மான
தலைவன்மற் றிவரே யென்னும் சான்றினுக் குறுதி யாமே. 34

இயலற நூல தொன்றை இயற்றினர் குடும்ப கோஷப்
பெயரினிற் றெடங்கி முன்னம் பிறங்கிரு படலஞ் சாற்றி
அயலெது குறித்தோமேலும் அருள்செயா தொழிந்தாரந்தச்
செயலருங் கவிகள் தேவர் செவிக்கொளும் அமுத மாமே. 35

புண்ணியன் உருவந் தன்னைப் புகைப்பட மெடுத்துப் போற்ற
நண்ணிய அன்பர் ஆவல் நயந்தனர் முயன்ற காலே
வண்ணவாண் முகங்கை கால்கள் வயங்குதல் காணு ராகி
வெண்ணிறத் தூசு தானே விளங்குதல் காண லானர். 36

புறத்திரு வுருவங் கோடற் கரியதாம் புதுமை நோக்கி
உறுத்திய வருத்தம் கூர்ந்தார் உருவனை கலேஞ ருலே
குறித்தனர் அடிகள் தோற்றம் கூர்ந்தஅவ் வடிவி னின்றும்
பொறித்தனர் அநந்த மிந்நாள் புகைப்படத் துதவி யாலே.

திருவடி படியிற் றேய்த லின்மையாற் சுவடு தோன்றாப்
பரவிய முட்கள் மீதும் படர்குவர் படருங் காலை
உருநிழல் தோன்றி டாதால் உரைபிர ணவமாம் தேகம்
மருவிய வுண்மை தாமே மதித்தனர் மருங்கு சூழ்ந்தோர். 38

அண்ணலார் ஆற்றல் தேரா தாணவ மதியாற் றன்மேல்
எண்ணெயை யிழுக்கிப் பஞ்சையூட்டியோர் இளைஞன் எய்திப்
புண்ணுறும் சிரங்கு போந்த தென்றனன் புகன்ற வாறே
நண்ணிய துடல முற்றும் நவைதரும் சிரங்கு தாமே. 39

பிற்பட வருந்தல் நோக்கிப் பெருந்தயைக் கோயி லாகும்
அற்புதன் பாவந் தீர்க்கும் அரும்புன லூற்றி னோடை
யிற்படிந் தயர்வு நீங்க இயம்பினர் இசைந்தவ் வாறே
பொற்புறுமோடை மூழ்கிப் பொருமல்தீர்ந்துவந்திட்டானல்

திருப்புகழ்ச் சாமி யென்னத் தென்றமிழ் நாடு போற்றி
ஒருப்படு முருக தாஸர் உபாசனை வலத்தி னாலே
திருப்புகழ் பலவும் பாடிச் சிறந்தனர் இவைகள் தம்மை
விருப்பொடும் வள்ள லார்பால் காட்டிடும் விருப்பத் தாலே;

எய்தினர் சிறிது கால மிருந்தனர் தனது நூலைப்
பெய்தனர் அடிகள் பாலிற் பெயர்த்தனர் தாள்கள் தம்மை
நொய்தினில் வியப்பு றாமல் இந்நிலை நுனித்து நோக்கி
செய்தநம் கவிகள் தம்மைச் சிறப்பியா தசட்டை யாக; 42

காண்புறு மிவர்யா ரென்னக் கருதினர் மிகவு மையம்
பூண்பரி சதனை னுள்ளம் பொருந்தினர் நிட்டை கூடி
மாண்புறும் தாயு மான வரதனைத் தோன்றக் கண்டு
நீண்வியப் புடைய ராகி நீங்கினர் ஐயந் தானே. 43

உள்ளுணர் வுடைய வுண்மை அநுபவ ஞானி யாய
வள்ளலார் பெருமை தேறி வரைந்தனர் பதிகம் தான்செய்

எள்ளரு நூல்க ளூடே இயம்பினர் வியந்து போற்றித்
தள்ளருங் கருணை யாற்றிற் றலைப்படு முணர்வி னாலே. 44

சடப்பொரு ளாகு மண்ணுங் கட்டிதம் தாளிற் பட்டே
உடைப்புறு மெனினும் சிவக ருணையி லொருப்பட் டோர்கள்
துடிப்புறு வார்க ளென்ன விளக்கினர் ஒருகாற் சூழ்ந்த
படிப்பின ருணரும் வண்ணம் பற்றிலா விறைவன் றானே. 45

## வேறு

சொற்றி டும்பிர சங்கத் தொருதினம்
பற்றும் யோகம் கலியிற் பயிலுதல்
முற்றி டாது துதிசெய லேமுழுப்
பெற்றி யென்ன வுணர்த்தினர் பெட்பினால். 46

தேசி கப்பெரி யார்முனம் செப்பிய
ஆசி லாக்குறட் பாவினுக் கந்தணர்
நேச மாயுரை வேண்ட நிகழ்த்தினர்
பேசு நான்கு விதத்திற் பிறங்குரை. 47

மேட்டுக் குப்ப விளாகத்தி லிவ்விதம்
ஈட்டு மாண்டிரண் டெல்லை யினிதுற
கூட்ட மென்மேற் குவிந்த திராப்பகல்
நாட்டம் வேறு நயந்தனர் வள்ளலார். 48

தத்தம் இன்னல் தவிர்க்கவும் தம்முடல்
சித்தி பெற்றுச் சிறக்கவும் பொன்செயும்
வித்தை கோரியு மேவிய பேரலால்
மெய்த்த போதம் விழைந்தவர் இன்றரோ. 49

ஐந்து பத்தெனு மாண்டுகள் சென்றுமேல்
வந்த ஸ்ரீமுக மார்கழி மாதத்திற்

றந்த தாளிட் டறையிற் றனித்தமர்
சிந்தை.யுற்றுச் சிலதினம் வைகுவார். 50

மீண்டும் அன்பில் வெளிவரு வார் அவண்
ஈண்டு வோர்கள் இதம்பெற வைகலும்
தூண்டு நற்பிர சங்கம் சொரிகுவார்
ஆண்டவன் அருளாட்சி கொள் அண்ணலே. 51

கடைவி ரித்தனம் கொள்பவர்க் காண்கிலேன்
கடையைக் கட்டுகின் றேனிக் கலியினில்
அடையும் யோகத் தமர்வ தரியதாம்
தடையி லாது துதிசெய லேதகும். 52

## வேறு

எனவே இதயக் குறிப்பதனை
இருந்தோர் உணர விளம்பினரால்
மனதால் வாக்கால் எழுத்ததனல்
வகுக்க முடியாத் தனிக்கருணை
நினைவார் தமக்கும் அவலமெலாம்
நீக்கி யருளும் ஒருஞானி
புனைமா மலர்த்தாள் உறுதுணையாய்ப்
பொருந்தி யுறைந்தோர் தளர்ந்திடவே. 53

———

# திருக்காப்பிடுமுன் செப்பிய அருண்மொழி

**நேரிசையாசிரியப்பா**

அன்பர்கள் உள்ளம் ஆறுதல் பெறவே
தன்பெருந் தயையின் சால்பினுக் கேற்ப
அவர்முக நோக்கி அறைந்தனர் வாய்மை
தவசிகா மணியாம் தற்பரன் இந்நாள்
கடைதனை விரித்தோம் கொள்வது கருதி

அடைபவர் இல்லை ஆதலிற் கடையைக்
கட்டிவிட் டனம்நீர் கண்ணருள் எய்த
விட்டொளிர் இந்த விழுத்தகு தீபமே
கடவுளா யெண்ணிக் கைதொழக் கடவீர்
திடமுறு சீவ காருணி யச்செயல்

வழுவா தாற்றி வருகுவீர் இனிநாம்
கடிகை யிரண்டரை காறும்நும் கண்ணிற்
படுகிலோம் எனினும் பரந்த இவ்வுலகோ
டெல்லா வுலகிலும் எவ்விடந் தனிலும்
செல்லா துறைவோம் சிந்நாட் பின்னர்

அருட்பெருஞ் சோதி ஆண்டவர் வருவார்
தெருட்பெருஞ் சித்திகள் செய்திட அப்போ
திவ்வுரு வோடு மெய்துவோம் இணைநீர்
செவ்விய திருவருட் செங்கோ லாட்சி
செய்குவோம் அகவினம் சேர்ந்தவர் தமக்கு

வைகலும் சாகா வரமளித் திடுவோம்
ஏனையோர் பரிபா கம்பெற வினிதில்
வானருள் தன்னை வழங்குவோம் நாமே
செறித்திடும் இந்தத் திருக்கத வந்தனை
உறுத்திடு மதிகா ரத்தினர் உற்றே

திறந்திடு மாறு செப்புவ ராகில்
நிறைந்திடு மிறைவன் நேர்ந்தருள் புரிவார்
என்றெடுத் தியம்பி எய்திய கலியில்
ஒன்றிய நாலா யிரமிசை யுற்ற
தொள்ளா யிரத்திற் றொடர்எழு பானந்

தாண்டு ஸ்ரீமுகப் பேர்அமை வருடத்தில்
சேண்டொடர் கதிரோன் செறிமக ரத்தில்
உற்றிடு மதியில் உடுபதி பூசம்
பற்றிடுந் திருநாள் பரவிய புகரோன்
வாரந் தன்னில் வளர்நடு நிசியாம்

நேரந் தீர்ந்து நிலவிய பொழுதில்
சித்தி விளாகத் திருமாளி கையில்
அத்தனார் உட்சென் றனைவருங் காண
திருக்காப் பிட்டுச் செறிந்தனர்
தோன்றாத் துணையாய்த் துலங்குற வினிதே. 1

ஈங்கிது நிகழ்ந்து சின்னாள் ஏகிய திதனை யோர்ந்து
தாங்கிய ஜில்லா வாட்சித் தலைவரும் தாசி லாகும்
வேங்கட ராம வையர் எனும்பெயர் விரவி னோனும்
ஆங்கில சிகிச்சைக் கூடத் ததிபரும் போந்திட் டாரால். 2

வந்தவர் மேட்டுக் குப்ப வரைப்பினைச் சூழ்ந்து நோக்கி
சிந்தையிற் பிழைபாடொன்றுந் தெரிகிலர்செறிந்துளோரை
நுந்தொழில் யாதென் றண்மி வினவினர் நுவன்ற வாறே
செந்தமிழ்த் துதிகள் ஓதும் செய்கையும் தொழிலென்றாரால்;

வள்ளலார் பணித்த தீதே யென்றவர் வழுத்தக் கேட்டுத்
தள்ளருங் கடுமை காட்டித் தாசிலாய் அமர்வோர் சாத்தும்
உள்ளுறு கதவந் தன்னைந் திறந்திடு வீரென் றோத
விள்ளு மவ்வாறு செய்ய மறுத்தனர் விரவினோர்கள். 4

அங்கதை யுறுதி யாக அனைவரும் புகன்ற பின்னர்
புங்கவர் எந்த நாட்டும் பொருந்தினர் பெரியோர் உண்மை
இங்கெவர் தேற வல்லார் என்றிசைத் திவரோ டுற்றோர்
சங்கைசெய் திடுதல் தீதென் றறைந்தனர் சாந்த மாக. 5

அரிதினில் இவர்கஃளாற்றும் அறத்தினுக் குதவி யாக
இருபது ரூபாய் அன்பி னீந்தனர் ஏகி னூரால்
வெருவிடக் கடுஞ்சொல் கூறி வெருட்டிய தாசி லானோர்
பெரியவர் மாண்பு தேருப் பெற்றியின் விளைவ தாக. 6

இவர்தரும் பரிமீ தேறி ஏகலும் எதிர்பா ராது
கவர்தரு முள்ளின் கண்ணே வீழ்த்திய திவரைக் காதல்
அவிர்தரும் பரிவா லாங்க ணிருந்தவர் அணுகி மீட்டார்
தவமுறும் பெரியர் தம்மைச் சாற்றிய தவறீ தென்னு: 7

ஆங்கில வதிப ராகும் இருவரும் ஐயர்தம்மைப்
பாங்கொடும் வண்டி யொன்றிற்படருவித்தகன் றிட்டார்கள்
ஓங்குநல் லறிவி னோர்கள் உலகிலெம் மதத்தின் கண்ணும்
ஈங்குளர் என்னும் வாய்மைக் கீதுதா ரணமே யன்றே. 8

ஆரணந் தேற மாட்டா அம்பலத் தொருவன் தன்பால்
பூரண அருளி னாட்சி அமைந்த புண் ணியனார் மாந்தர்
நேர்உரு மறைந்த பின்னும் நினைபவர் எதிரிற் றோன்றிக்
கோரிய விழைவி யாவும் கொடுத்தருள் கூர்கின் றாரே. 9

காரணப் பட்டில் வாழும் கருணிகர் மரபில் வந்த
பேரியல் கந்தசாமிப் பிள்ளையார் கனவிற் றோன்றிச்
சீரியல் வடலூர் போதப் பணித்தனர் திகழ்பா மாலை
நாரினிற் பாடு மாறும் நவின்றனர் எனச்சொல் வாரால். 10

சாலையி லன்ன தானப் பணியினை யாற்றச் சார்ந்து
மேலிவ ணுறைந்த சுப்பு ராயப்பேர் விரவு மன்பர்

கோலிய பொருளை நாடி இருளினிற் குறுகுங் சாலே [ரால்.
வாலிய வெளிச்ச முன்னே வயங்குமென் றுரைத்திட்டா

சுழித்தெழு மன்பர் ஆற்றிற் றுயருறும் போதி லெல்லாம்
வழித்துணை யாகப்போந்து வள்ளலார் அருள்செய் துள்ளார்
இழித்தபுன் மதியே னெவ்வா றியம்புவன் முழுது மோர்ந்து
விழுத்தவ முடையர் தாமும் விளம்புதற் கரிய சீர்த்தி. 12

கனவினும் காட்சி யானும் கருணைவா ரிதியாம் ஐயன்
துனியுறு மடியர் தம்பா லிரக்கத்தாற் றோன்றித் தோன்றி
நனியருள் புரிய மாட்சி இனைத்தென நவிலப் போமோ
அனையசான் றுரைகள் தேரின் ஆயிரம் அனந்த மாமே. 13

அருகினிற் சூழ்ந்தோர் பல்லோர் அறிந்தவற்புதங்கள்யாவும்
ஒருமையிற் றொகுத்தா ரென்று முணர்கிலம் உணர்ந்தார் தாமும்
அருமையிற் பிழைப டாமல் அயலவர்க் குரைத்தாரென்றும்
உரைசெயற் கரிய தாகும் ஆதலின் உரையிற் காணும். 14

திருவுறு நிகழ்ச்சி யாவும் தெருளுறு மறிஞர் சில்லோர்
உரிமையி லுள்ள மேற்றிங் குரைத்தவை பெரிது மாகும்
மருவிய பலரு மிந்நாள் மறைந்தனர் மரபி னாலே
அருகிய சிலரே நின்றார் அறிவுறத் தெருட்டு மாறே. 15

முடிவிலா வொருவன் மாட்சி மொழிவது முடியா தென்னு
முடிவினை யறியார் இல்லை மூதக லிடத்தே பின்னும்
கடிதடைந் தருட்பே ராட்சி கடமையி லாற்ற வேண்டி
அடையுநற் கால நோக்கி அடியவர் இருந்திட் டாரால். 16

ஆக திருவிருத்தம் 409

திருச்சிற்றம்பலம்.